# நமது ராஜாஜி





எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்





பதிப்பாளர்:
ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்
53-56, பவழக்காரத் தெரு : : சென்னை 1
1953 [ரூ. 1-0-0

முதற் பதிப்பு: மே, 1951
இரண்டாம் பதிப்பு: ஜூன், 1953

*Approved by the Madras Text-Book Committee for Class use: Vide Page 92, Part II of Fort St. George Gazette dated 13th May 1953*



The Progressive Printers, Madras-1

# முகவுரை

அறிவுத் திறனுக்கு ஓர் அவதாரம் நமது ராஜாஜி. ந்த புலமையினுக்கும் அவர் தாயகமாம். ஆதலின், ரை அந்தரங்க ஆலோசகராகக் கொண்டார் காந்தி ள்.

உலகெலாம் ஏத்தும் ஏற்றம் படைத்த நமது பண்டித ாஹர்லால் நேருவோ அவரை மகாமேதை என்று கழ்ந்திருக்கிறார். அத்தகைய அறிவாளி நமது மாகாணத் ன் முதன் மந்திரியாக விளங்குகிறார் இப்போது.

அறிவின் திறமும் ஆழ்ந்த புலமையும் படைத்த ராஜாஜியின் வாழ்க்கைச் சரிதம் நம் இளைஞருக்கு இனிய ஊன்றுகோல்போல் உதவும்.

ஆதலின் அதனை ஓரளவு இங்கே வரைந்துள்ளோம். உண்மைத் தமிழரான ராஜாஜியின் சரிதத்தை நம் தமிழகம் நன்கு வரவேற்குமாக.

இங்ஙனம்,

M. S. சுப்பிரமணிய ஐயர்.

# பொருளடக்கம்

# நமது ராஜாஜி

## 1. தோற்றுவாய்

"பணம், பட்டம், பதவி இவற்றை அறவே துறந்தமைபற்றி மகாத்துமாவை நாமெல்லாம் போற்றுகின்றோம். அதே போல, சுதந்தரத் தாகம், தேசசேவை, சீரிய உணர்ச்சி, சிறந்த தியாகம் முதலிய குணநலங்கண்டு, ராஜாஜியை நாம் மதிக்கின்றோம். நமது தேசப் பேரறிஞரின் உயர்ந்த பிரதிநிதி ராஜாஜியே!", என்று முன்னம் சென்னைச் சட்டசபையில், சக்கரவர்த்தி ராஜ கோபாலாசாரியாரின் படத்தைத் திறந்து வைத்த பொழுது, நமது தேச முதன்மந்திரியார் பண்டித ஜவாஹர்லால் குறிப்பிட்டார்.

திருக்குறளே போலக் குறுகிய வார்த்தையில் நுணுகிய போதம் புரிந்து வந்தார் மகாத்துமா காந்தி. அக்காந்தி போதத்தினுக்குத் தெள்ளிய விளக்கம் உரைத்தவர் ராஜாஜியே. வேதம், உபநிஷதம், கீதை, குறள் இவற்றினுக்கும் ராஜாஜி பேருரை கூறி வருகிறார்.

எதிரே வந்து பேசுபவரின் உள்ளத்தையும் உரையையும் ஊடுருவி உணர வல்ல ராஜாஜி, இப்போது நமது தேசத்தின் மதிமந்திரிகளுள் ஒருவ

ராய் விளங்குகின்ருர். அமைச்சரின் இலக்கணத்தைக் குறித்து ஒரு புலவர் புகன்றிருப்பது இது:

'நல்ஆவின் பாலில் நறுந்தேன்
கலந்தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி, மதிநுட்
பருமாகிச் சோர்வில்
சொல்லால் அடையார் மனமும்
களிதூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொல் பயன்ஆய்ந்
துநுகர வல்லார்.'

இப்பாவினுக்கு ராஜாஜி ஓர் எடுத்துக் காட்டாய் இருப்பவர். பார்த்தறிய முடியாத இமயமலையின் பண்பும் பயனும் போன்ற அப்பேரறிஞரின் குணநலங்களை இளைஞர் அறிந்துகொள்ளுதல் நலமாகும். இஃது அவரது வாழ்க்கை வரலாறு.

# 2. குலப் பெருமை

தமிழகத்தின் ஒரு பாகம் கொங்கு நாடு. 'கொங்கு' என்பதற்கு, 'வாசனை' என்பது பொருள். 'கொங்கு மலிந்தால், எங்கும் மலியும்,' என்பது ஒரு பழமொழி. அத்தகைய கொங்கு நாட்டிலே, சேலம் ஜில்லா ஒரு பகுதியாம். அந்த ஜில்லாவில், ஓசூர் என்னும் ஒரு நகரம் உண்டு.

ஓசூரையடுத்து, தென்பெண்ணை நதி ஓடுகின்றது. அந்த ஆற்றின் கரையிலே, தொரப்பள்ளி என்பது ஒரு கிராமம். அக்கிராமத்திலே வைணவ வேதியர் பலர் உண்டு. ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்கு முன்னே, சக்கரவர்த்தி ஐயங்கார் என்பவர் அங்கே வசித்து வந்தார்.

சக்கரவர்த்தி ஐயங்கார், அந்த ஊரின் கிராம முனிசீப்பு; வடமொழியிலே மிக வல்லவர்; தமிழிலும் ஞானம் வாய்ந்தவர்; வேதாகமங்களில் நன்கு பயின்றவர்; புராண இதிகாசங்களில் நல்ல தேர்ச்சி பெற்றவர்; இயற்கையிலேயே தலைசிறந்த அறிஞருமாவர்.

ஒழுக்கமும் சீலமும் அவருக்கு அணிகளாய் விளங்கின; இனிய முகமும் கனிந்த சொல்லும் புகழூட்டி வந்தன. அவர் இரவிலே கிராமவாசிகளுக்கு இராமாயண பாரதக் கதைகளைச் சொல்லுவார்; பகலிலே பலருக்கும் நீதி சாஸ்திரங்களை மிக எளிய முறையில் எடுத்துரைப்பார்.

நற்குண நற்செயல்களால் அவர் பெயர் எங்கும் பரவியது; அவரது செல்வாக்கும் விரிந்தது. வேத சாஸ்திரங்களில் விருப்பம் உள்ளார் அவரை நாடி வருவர். ஐயந்திரிபுகளை அகற்றிக்கொள்வர். அவரது ஆழ்ந்த கல்வியையும் ஞானத்தையும் கண்டு களிப்பர்.

அந்நாளிலே சென்னை ராஜதானிக் கல்லூரியில் வட மொழிப் புலவராய் இருந்தவர் ஒரு ஜெர்மானியர். அவர் பெயர் ஹெப்பார்ட்டு என்பது. அம்மொழியில் வல்லாரை அடைந்து அறிவு விளக்கம் எய்துவார்



சக்கரவர்த்தி ஐயங்கார்

அப்புலவர். கற்றலின் கேட்டலே மிக நன்று அன்றோ?

ஹெப்பர்ட்டு என்பவர், அடிக்கடி சக்கரவர்த்தி ஐயங்காரை நாடிச்செல்வார்; அரிய நூல்களின் நுணுக்கங்களை உசாவி அறிவார்; தம் ஐயப்பாடு களைப் போக்கிக்கொள்வார்; ஆனந்தத்துடன் திரும்புவார். 'கற்றாரைக் கற்றாரே காமுறுவர்,' என்பது இயற்கைதானே!

அச்சமயம் சென்னைக் கவர்னராய் இருந்தவர் லார்டு கன்னிமரா என்பவர். அவர் காதுக்கும் நம் ஐயங்காரின் அறிவாற்றல்கள் எட்டின. ஓரூருக்கு அவர் விஜயஞ்செய்த காலத்தில், ஐயங்காரை அன் புடன் அழைத்தார்; அவரது புலமைத் திறங்கண்டு பெரிதும் களித்தார். அறிவுடை ஒருவனை அனைவ ரும் விரும்புவர்; புகழ்வர்!

'கவர்னர், ஐயங்காரை அழைத்துப் பேசிப் புகழ்ந்தார்,' என்ற செய்தி எங்கும் பரவிற்று. அத்துடன் சக்கரவர்த்தி ஐயங்கார் பெயரும் கீர்த்தியும் பின்னும் ஓங்கின. ஓங்கவே, அவரது புலமையின் பயனை நுகரப் பலரும் முற்பட்டனர். எனவே கலைமகளுடன் அல்லும் பகலும் அவர் உறவாடி வந்தனர்.

சக்கரவர்த்தி ஐயங்காருக்கு 'நல்லான்' என்னும் அரிய அடைமொழி ஒன்றுண்டு. அதன் விவரம் அதிசயமாயிருக்கும்: தொண்டை நாட்டின் தலைநக ரான காஞ்சீபுரத்துக்கு அருகே 'வேகவதி' என்னும் சிற்றாறொன்று ஓடுகிறது. பனியும் வாடையும் பெரி தும் வீசும் மார்கழி மாதத்திலே வைணவ வேதிய ரொருவர் அதிகாலையிலே அதில் நீராடச்சென்றார்.

அவர் பரம வைதிகர்; ஆசார சீலர்; பக்திமானுங்கூட. அவர் கதிரவன் உதிக்குமுன் னம் நீராடிவிட்டுக் கரையேறினர். ஆற்றின் வெள்ளத்திலே பிணமொன்று மிதந்து வந்தது. அதனைக் கண்டதும் அவர் மனங்கரைந்தார்; அதற்

குரிய ஈமக்கடன்களைச் செய்து முடிக்க விரும்பி னார். கரை வழியே சென்ற சிலரைத் துணைக்கு அழைத்தார். அவர்களோ, "சண்டாளனது சவம் இது! இதனைத் தீண்டுதலும் பாவமாகும்! எனவே ஈமக்கடன் கழிக்க உதவுதல் எங்ஙனம்?" என்று சொல்லிப் போனார்கள். ஆயினும், திக்கற்ற சவத் தினை அடக்கம் செய்தே தீருவதென வேதியர் உறுதி பூண்டார்.

அவர், தம் தோளிரண்டுமே துணையெனக் கொண்டு, அச்சவத்தை எடுத்துச்சென்று, சுடலை யிற் சுட்டெரித்து வீடுதிரும்பினார். அச்செய்தி அந்த ணர் வீதியெங்கும் பரவிற்று. 'குலத்துக்கு ஒவ்வாத கருமம் புரிந்தான்!' என எல்லாரும் அவரை வெறுத் தனர்; குலத்தினின்று விலக்கியும் வைத்தனர்.

'திக்கற்ற சவத்தை அடக்கஞ் செய்தல் அரிய புண்ணியமாகும்,' என்று அவர் மன்றாடிப் பார்த் தார். அதனை மறைக்குலத்தார் மதிக்கவில்லை.

'புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிதே
ஒப்புரவின் நல்ல பிற'

என்பதை அவர் எண்ணி, 'எம்பெருமானே கதி!' என்று தனியே வசித்து வந்தார்.

சின்னாட்கழித்து அவர் தந்தையாரின் சடங்கு நாள் வந்தது. அதனை நிறைவேற்ற அந்தணரின் துணை தேவை. ஊரிலுள்ளாரெவரும் உதவிக்கு வர வில்லை; வேதியரோ, கடவுளைத் துதித்தவராய்த் திதிக்குரிய ஏற்பாடனைத்தும் செய்யலானார்.

அவ்வேளையிலே பூசுரர் ஒருவர் அங்கே தோன் றினார்; சடங்கைச் செவ்வனே முடித்துத் தந்தார். "சடங்கை நடத்தித்தரும் சழக்கன் யாவன்?" என்று அறிய வேண்டி ஊரார் அனைவரும் அவ் வீட்டின் எதிரே வந்து குழுமினர். திதியை முடித்து

வைத்த வேதிய வித்தகர் வீதிக்கு வந்தார்; கூடி நின்ற அனைவரையும் நோக்கினர்; "அந்தணரே, இவன் உங்களுக்குப் பொல்லானய் இருக்கலாம்; ஆனல், எனக்கோ, மிக நல்லான்! எண்ணிப் பாருங்கள்!" என்று கூறினர். கூறியதும் அவர் முகத்திலே ஒளி வீசியது. உடனே அவர் மறைந்து விட்டார். அனைவரும் பிரமித்தனர்; 'தோன்றி மறைந்தவர் திருமாலே,' என்று உறுதி கொண்டனர்.

இந்த அதிசயத்துக்கு ஆதாரமான அந்தணரின் பெயர் **வரதாசாரி** என்பதாம். அந்நாள் தொட்டு வரதாசாரியாரின் வழி முறையோருக்கு '**நல்லான்**' என்னும் பட்டப் பெயர் வழங்கி வரலாயிற்று. அம் மரபினர் நாளடைவிலே வெவ்வேறு இடங்களிற் சென்று வசித்து வந்தனர். அவர்களுக்கு இன்றும் வைணவ சமூகத்திலே மதிப்பு அதிகம் உண்டு.

வரதாசாரிக்கு முன்னரே '**சக்கரவர்த்தி**' என்ற பட்டமும் இருந்து வந்தது. திருமால் தோன்றி மறைந்த பின்போ, '**நல்லான் சக்கரவர்த்தி**' என்ற பெயர் பிரபலமாயிற்று. அத்தகைய பரம்பரையில் வந்தவர் ஓசூர் சக்கரவர்த்தி ஐயங்கார். அந்த ஓசூர் ஐயங்காருக்கு வாழ்க்கைத் துணைவியராய் வாய்த்த அம்மையாரின் பெயர் **சிங்காரம்மாள்** என்பது.

> 'அன்பும் அறனும் உடைத்தாயின், இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது'

என்னும் வாக்கினுக்கு இலக்காய் அவ்விருவரும் இல்லறத்தை மாண்புடன் நடத்தி வந்தனர். வருங்கால், அவர்களுக்குப் புதல்வர் மூவர் பிறந்தனர். அம்மூவரும் முறையே **நரசிம்மன், சீனிவாசன், ராஜ கோபாலன்** எனப்படுவர். கடைக்குட்டியான **ராஜ கோபாலர்**, 1878-ஆம் வருஷம், டிசம்பர் மாதம் 9-ஆந் தேதி தோன்றியவர். இவரே நமது **ராஜாஜி.**

# 3. பிள்ளைப் பருவம்

நல்லான் சக்கரவர்த்தி என்று நானிலம் போற்றும் மரபில் வந்தவர் ராஜாஜி. அவர் பிறந்த நாளையும் கோளையும் பார்த்து ஜாதகம் கணித்தார் தந்தையார். உதித்த வேளையோ, உயர்வு உடைய தாய்த் தோன்றியது; இராமனும் கிருஷ்ணனும், சங்கரரும் இராமானுசரும் அவதரித்த வேளையாயும் இருந்தது. 'பின்னாளிலே நம் பிள்ளை பெருமை பெறுவான்!' எனத் தந்தையார் மிகுந்த களிப்புக் கொண்டார். பெற்றோர் இருவரும் பாலனைப் பரம பரிவுடன் பாராட்டி வந்தனர்.

'காக்கை குருவி எங்கள் ஜாதி; கடலும் மலையும் எங்கள் கூட்டம்,' என்று பாரதியார் பாடினார் அல்லவா? அதற்கிணங்க, உயிர்த்தொகுதிகளிடம் அக்குழந்தை உள்ளன்பு காட்டி வந்தது; 'எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும்,' என்னும் விருப்பம் அப்போதே அக்குழந்தையிடம் அரும்பியது எனலாம். ஏழாம் வயது நிரம்பும் வரையில் தந்தையாரே மைந்தருக்குக் கல்வி புகட்டி வந்தார்; பின்புதான் அவரைப் பள்ளிக்கூடத்திற் சேர்த்தார்.

ராஜாஜியிடம் 'கண்டது கற்கப் பண்டிதனாவான்,' என்னும் அறிகுறிகள் பால வயதிலேயே புலப்பட்டன. 'அஃதென்ன? இஃதென்ன?' என்று தந்தையாரை ஓயாது கேட்பார் சிறுவர்; காணும் புத்தகங்களை எல்லாம் எடுத்துப் புரட்டுவார்; ஆழ்ந்து படிக்கவும் ஆசை கொள்வார்.

அவர் ஒன்றை ஒரு முறை படித்தாலோ, பிறர் படிக்கத் தாம் கேட்டாலோ, போதும்; எந்த விஷயமும் அப்பிள்ளையின் மனத்தில் பதிந்துவிடும். எதையும் கூர்ந்து கவனித்தலும் விரைந்து அறித

லும் அவரிடம் மிகுந்து நின்றன. தக்கவயதானதும், பெங்களூரிலே லண்டன் மிஷன் பாடசாலையிற் சேர்ந்து படித்தார் சிறுவர்; பின்பு அந்நகரிலுள்ள கலா சாலையிற் சேர்ந்து படிக்கலானார்.

கலாசாலையின் ஆசிரியர்களான ஆங்கிலேயர் கள் அம்மாணவரின் மதிநலங்கண்டு, பரிவுகொண்டு, பேராதரவு காட்டி வந்தார்கள். ஆங்கில நாட்டு மேதையான ஷேக்ஸ்பியர் நாடகங்களை மாணவர் மகிழ்ந்து படித்தார்; பெயர் பெற்ற நாவலாசிரிய ரான 'ஸ்காட்டு' என்பவரின் நாவல்களையும் ஆவ லுடன் வாசித்து வந்தார்.

பதினெட்டாவது வயதுக்குள் பி. ஏ. பட்டம் பெற்றார் ராஜாஜி. உடனே மைந்தருக்கு மணம் முடிக்க வேண்டுமென்று தந்தையாருக்கு விருப்பம் பிறந்தது. அவர் அவ்வாறே அலர்மேல் மங்கை என் னும் நங்கையைத் தேடிக் கல்யாணம் பண்ணிவைத் தார். அந்நாளில் வக்கீல் தொழிலே பலரையும் காந்தம் போலக் கவர்ந்து நின்றது. ராஜாஜியின் சொல் வன்மையும் வாதத்திறமையும் அக்கவர்ச் சிக்குத் துணை புரிந்தன.

ஆதலின், சக்கரவர்த்தி ஐயங்கார் வக்கீல் படிப்பினிமித்தம் தம் புதல்வரைச் சென்னைக்கு அனுப்பினார். ராஜாஜி சென்னையிலுள்ள சட்டக் கல்லூரியிற் சேர்ந்து, நன்கு படித்து வரலானார். அப்போது அவர் மாணவர் விடுதியிலேயே தங்கி யிருக்க நேர்ந்தது. அவ்விடுதிதான் இப்போது 'ஐஸ் ஹவுஸ்' என வழங்குகிறது.

ராஜாஜி சட்டக்கல்லூரியிற் பயின்று வருஞ் சமயம், வேதாந்த வித்தகரான சுவாமி விவேகானந்தர் சென்னைக்கு வந்தார்; அம்மாணவர் விடுதி யிலேயே தங்கியிருந்தார். கலாசாலை மாணவரும்

நகரமாந்தரும் அடிக்கடி சுவாமிகளைக் கண்டு அளவளாவுதல் வழக்கம்.

பிறவிக்குணமான நுண்ணறிவும் கடவுள் பத்தியும் வாய்ந்த ராஜாஜியும் சுவாமிகளிடம் ஈடு பாடு உடையவரானார்; அவ்வித்தகரின் சொல்விளக் கத்திற் சிந்தை குவிந்தார்; குவியவே, ராஜாஜியிடம் தேசப்பற்றும், தியாக புத்தியும், தீவிர உணர்ச்சி யும் வளரத்தொடங்கின; சமூகக் குறைபாடுகளைப் போக்கும் ஆர்வமும் பொங்கி எழுந்தது.

விவேகானந்தரின் தரிசனமும், தெள்ளிய மொழிகளும், துறவுத் தன்மையும், தூயநோக்கமும் ராஜாஜியின் வருங்கால வாழ்க்கைக்கு வழி கோலின. அவற்றுடன் சுவாமிகளின் அருள்நோக் கமும் நமது ராஜாஜிக்குக் கிட்டியது. அதன் விவரம் இது:

இந்திய இளைஞரைக் கண்டால், விவேகா னந்தருக்கு ஓர் ஆர்வம் பிறக்கும். அவர்களைத் தட்டிப் பார்த்துத் தரம் அறிய அவர் தவறார். மாணவரின் விடுதியிலே தங்கியிருந்த போது, ஒரு நாள் மாணவரின் அறைகளையெல்லாம் அவர் பார்த்து வந்தார்; அவர்களின் நடை உடையை யும் கவனித்தார்.

அத்தறுவாயிலே, அவர் மாணவர் ராஜகோ பாலரின் அறைக்குள் புகுந்தார்; சுற்றுமுற்றும் பார்த்தார்; இளைஞரையும் கூர்ந்து நோக்கினார்; சுவரிலே கண்ணபிரானது திருவுருவப்படமொன்று காட்சியளித்தது. அதனைக் கையிலெடுத்துக் கனி வுடன் உற்றுப்பார்த்தார்; உடனே ராஜாஜியை நோக்கி, "இப்படத்திலே கண்ணனது வடிவம் நீல மேக வண்ணமாய் இருப்பதேன்?" என்று வினவினார்.

ராஜாஜி சிறிதும் தயங்கவில்லை; சிந்தையிலே தெளிவு கொண்டார்; புன்முறுவலும் பூத்தார்; சாளரத்தின் வழியே தெரியும் நீலவானையும் நெடுங் கடலையும் நோக்கிய வண்ணம், "இவற்றின் நிறம் நீலமே; இரண்டும் எல்லையற்றவை. ஆண்டவனும், அவ்வாறே எல்லையற்ற பரம்பொருளாம். ஆதலின், கடவுளை நீலமேக நிறத்தனாக நினைத்தல் இயல்பே," என்றார்.

விடையைக் கேட்டதும் விவேகானந்தர், மனத்திலே களிப்பு மிகுந்து, "ஆம்! வானும் கடலும் நீலநிறமாகத் தோன்றும் தூரப் பார்வைக்கு; அருகே சென்று கடல் நீரைக் கையில் அள்ளிப் பார்த்தால், தெள்ளத்தெளிந்த வெள்ளை நிறமாகவே தென்படும். எட்ட நின்று நோக்குகையில் கடவுள் கரிய நிறமெனக் கருதுகிறோம்; கிட்டச் சென்றுவிட்டால், தூய வெண்மையாகவே துலங்குவார்," என்று கூறினார்.

அடிகளார் அந்த அறையை விட்டு வெளியே வருகையில், "வருங்காலத்திலே இவ்வாலிபர் பெரிதும் பிரகாசிப்பார்!" என்று ஆசியுரை கூறினர்; அருள் நோக்கும் காட்டினர். பாரத பூமியைப் பெருமைப்படுத்த வந்த பெரியாரின் வாக்கு வீண் போமோ?

'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்'

என்பது தேவர் வாக்கு. அன்று முதல் சட்ட மாணவர் அனைவரும் சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியாரிடம் தனி மதிப்பும் பிரியமும் வைக்கத் தொடங்கினர். ராஜாஜியும் சுவாமிகளின் ஆசி உரையை எண்ணியெண்ணி, இனிது நடக்கமுற்பட்டாரென மொழிய வேண்டும்.

நாளடைவிலே ராஜாஜி சட்டப் பரீட்சை எழுதினர்; அதில் பி. எல். பட்டம் பெற்ருர். பின்பு அவர் தமது சொந்த ஊர் சேர்ந்தார்.



ராஜாஜியின் குடும்பம்

வக்கீல் தொழிலில் இறங்க வேண்டும்; அதற்கு ஜில்லாவின் தலைநகரே சிறந்ததெனக் கருதினர். சேலம் சேர்ந்து 1,900-ஆம் ஆண்டு தொழில் நடத்தத் தொடங்கினர்.

# 4. தொழில் திறமை

புதிய வக்கீல்கள் ஆரம்பத்திலே பெரிய வக்கீல்களிடம் கற்றுக்குட்டிகளாக வேலை பழகுதல் வழக்கம். அப்போதுதான் தொழிலின் நுட்பமும் போக்கும், தெளிவும் சுளிவும் நன்கு புலனாகும். அது பற்றி, ஒரு பிரபல வழக்கறிஞரை அணுகினார் ராஜாஜி. அக்கனவான் அவர் விருப்பத்திற்கு ஒப்பவில்லை.

அது கண்டு ராஜாஜி ஏக்கம் அடையவில்லை; தம் கையே தமக்கு உதவியெனத் துணிந்தார். முதன்முதல் வந்த வழக்கின் விவரத்தை ஆய்ந்தறிந்தார்; சட்ட ஆதாரங்களையெல்லாம் குறித்துக்கொண்டார்; நீதி மன்றத்திலே வாதாடத் தொடங்கினார்.

முன்னம் அவரை கற்றுக்குட்டியாக வைத்துக்கொள்ள மறுத்த பிரபல வழக்கறிஞரே எதிர்த்தரப்பின் வழக்கறிஞராய் அமர்ந்திருந்தார். 'பழம்புலியின் முன்னே புதிய குட்டி விளையாடப் போகிறது!' என்று பலரும் ஆவலுடன் நோக்கி நின்றனர்; பின்பு ராஜாஜியின் சொல்வன்மை, வாதத்திறமை இரண்டையும் கண்டு வியந்தனர்.

ராஜாஜியே அவ்வழக்கில் வெற்றி கொண்டார்; பெரிய வழக்கறிஞரோ, தோல்வியுற்றார். 'எடுத்த எடுப்பிலேயே பெரிய வழக்கறிஞரைப் புரட்டிப் போட்டுவிட்டாரே!' என்று வழக்காளர் அனைவரும் வியப்பு எய்தினர்; ராஜாஜியையே தமக்கு வழக்கறிஞராகக் கொள்ளவும் விரும்பி நின்றனர்.

அம்முதல் வெற்றியே அவரது வருங்காலக் கீர்த்திக்கு ஆதாரமாயிற்று. அவரது சட்டஞான மும் வாத நேர்த்தியும் வளர்மதி போல வளர்ந்து வந்தன. அதனால், அவரிடம வழக்குகள் குவிந்தன; வருவாய் பெருகிற்று; மாதம் இரண்டாயிரம், மூவாயிரத்துக்குக் குறையாது.

அந்நாளிலே சேலத்தில் மூவர் மிகப் பெரிய வழக்கறிஞர்கள். அவருள் முதல்வர் **விஜயராகவா சாரியார்.** அவர் பழுத்த தேசபக்தர்; பிரபலமான ஜனத்தலைவர்; பெரிய பேச்சாளர்; மெத்தவும் படித்தவர். 'விஜயராகவாசாரி' என்றால், நீதி பதிகளும் பத்தி விசுவாசம் காட்டுவார்கள்.

அவர் வாதம் புரியும் போது, மேஜையை அடித்துப் பேசுவார்; உரத்த குரலெடுத்தும் வாதிப்பார். அவரது தோற்றத்திலும் தொனி யிலும் ஒரு கம்பீரம் காணப்படும். அவர் ஒரு பக் கத்தில் வழக்கறிஞராய் வந்தால், மற்றொரு பக்கத் துக்கு ராஜாஜியையே வழக்கறிஞராக அமர்த்து வார்கள். எதிர் எதிராய் இருந்து இருவரும் வாதிப் பதைப் பார்க்கப் பற்பலர் வழக்கு மன்றத்திற் கூடுவது வழக்கம்.

ராஜாஜியின் வாதத்தில் படாடோபம் பங்கு பெறாது; அமெரிக்கையே நிலவி நிற்கும். வாத நுணுக்கமோ, விஜயராகவாசாரியாரையும் வியக் கச் செய்யும். சொல் வன்மையோ, நீதிபதியின் உள்ளத்தையும் அள்ளும். சொல்லின் நயமோ, யாவரையும் சொக்க வைக்கும். பல சமயங்களில் விஜயராகவரையும் வென்றுவிடுவார் ராஜாஜி.

'கிரிமினல்' வழக்குகளையே விரும்பி ஏற்பார் ராஜாஜி. சாட்சிகளைக் கூண்டில் ஏற்றிக் குறுக்கு

விசாரணை செய்வதில் ராஜாஜி அதிசமர்த்தர். அக்காலத்திலே வெள்ளையர் என்றால், இந்தியருக்கு நடுக்கம் உண்டாகும். அவருள்ளும் அதிகாரி என்றாலோ, கேட்க வேண்டுவதேயில்லை.

ஓசூரிலே உதவி கலெக்டராய் இருந்தார் ஓர் ஆங்கிலேயர். அவரை ராஜாஜி ஒரு வழக்கிலே குறுக்கு விசாரணை செய்ய நேர்ந்தது. அவ் வெள்ளையர் தாம் அதிகாரி என்று சிறிது எடுப் பாகப் பதில் சொன்னார். உடனே மிகமிக நுணுக்கமாக ராஜாஜி குறுக்கு விசாரணை செய்ய லானார். அவர் திணறிப்போய், ராஜாஜியின் மதி நுட்பத்தை வியின்றி வியந்து பேசினார்.

ஒரு ஜமீந்தாரின் வேலையாட்கள் காட்டிலே மரக் களவு செய்தார்கள். அவர்களைக் கையும் களவுமாகக் காட்டிலாக்கா அதிகாரியே பிடித்தார் என்று ஒரு வழக்கு வந்தது. அதில் வேலையாட் களின் வழக்கறிஞராய் அமைந்தார் ராஜாஜி; அந்த அதிகாரியை மிக நுட்பமாகக் குறுக்கு விசாரணை செய்தார்.

முடிவிலே, 'கையும் களவுமாய் வேலையாட் களைப் பிடித்தேன்!' என்ற அதிகாரியே, அதே நேரத்தில் தமது வீட்டிலே தேநீர் அருந்திக்கொண் டிருந்ததாக ஒப்புக்கொள்ள நேர்ந்தது. பொய் கூற வருபவரை அவ்விதம் அம்பலமாக்குவதில் ராஜாஜிக்கு இணை ராஜாஜியேதான்.

ஒரு வழக்கிலே ராஜாஜிக்கு எதிராகச் சென்னையிலிருந்து வந்த 'சடகோபாசாரியார்' என் பவர் வாதாடினார். அவர் சென்னை உயர்நீதிமன்றத் திலே பிரபல வழக்கறிஞருள் ஒருவர்; சட்ட அறிவி லும் வாதத் திறமையிலும் மிக வல்லவர். வெளி

யூரிலே நீதிபதிகளின் முன்பு அவர் விசித்திரமான போக்கொன்றைக் கையாள்வார்.

அவர் தமது வாதத்தின் முடிவிலே, நீதிபதியை நோக்கி, "இங்கே கடவுளே நேரில் வந்து நீதிபதி பீடத்தில் அமர்ந்திருப்பது போல நினைக்கிறேன்!" என்று துதிபாடி அமர்ந்தார். அதுகேட்ட ராஜாஜி பசுவைப் போல எழுந்து, "வக்கீல் தொழிலிலே இன்று நான் புதிய அனுபவம் ஒன்று காண்கிறேன்! ஆயினும், நானோ, என் கைவசமுள்ள பத்திரங்கள், எனக்குத் தெரிந்த சட்டங்கள், என் பக்கத்துச் சாட்சியங்கள் இவற்றை நம்பியே வாதிக்க முடியும்!' என்று அமைதியாகக் கூறினர்.

அவ்விதம் வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல அடக்கமாக அவர் பேசியதைக் கேட்ட அனைவரும், வயிறு குலுங்க நகைத்தனர்; நீதிபதியும் புன்னகை பூத்தார்; எதிர்த்தரப்பு வழக்கறிஞரும் கொல்லென்று சிரித்து நின்றார். வேறென்ன செய்வார்!

'சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து'

என்னும் திருக்குறளையே ராஜாஜியின் வாத நேர்மைக்கு ஆதாரமாகக் காட்டலாம்.

வழக்கறிஞர் ராஜாஜியிடம் ஒரு விசேஷக் குணம் உண்டு: அவர்தம் மனமும் அறிவும் நியாயத்தை நாடியே பாயும். ஏழையான வழக்காளி வந்தால், அவனது வழக்கில் நியாயம் உண்டு என்று தோன்றினல், பணம் வாங்காமற்கூட வழக்கை நடத்தி அவர் வெற்றி தேடிக்கொடுப்பார்.

சேலம் ஜில்லாவிலே **குமாரமங்கலம்** என்னும் ஜமீன் ஒன்றுண்டு. முன்னாள் மந்திரியாரான **டாக்டர் சுப்பராயர்** இப்போது அதன் தலைவர். அந்த ஜமீன் குடும்பத்துக்கு ராஜாஜி நெடுநாள் வழக்கறிஞராய் இருந்து, வேண்டிய உதவி புரிந்தார். ஜில்லாவின் பெரிய சீமான்களும் அவரையே தங்கள் குடும்ப வழக்கறிஞராகக் கொண்டிருந்தார்கள்.

வரும் வழக்குகளின் சிக்கல்களை ஊடுருவி உணர்ந்து, ஏற்ற ஆதாரங்களை ஆராய்ந்தறிந்து, மதி நலம் மிகுந்து வாதாடி வந்தமையால், அத் துறையிலே வெகு விரைவில் முதன்மை பெறலானார் ராஜாஜி; 'பெரிய வழக்கறிஞர்' என்னும் பெயர் பெற்றார்.

# 5. மனப் பண்பு

**வ**க்கீல் தொழிலிலே நல்ல வருமானம்—முறுக்கான பருவம்—இங்கிலையில் ராஜாஜியின் வாழ்க்கை உயர்தரமாகவே இருந்தது. அலங்காரமாக ஆடை உடுப்பதில் அவருக்குப் பிரியம் அதிகம். விலை உயர்ந்த உடைகளே தரிப்பார். சரிகை வேஷ்டியும், பட்டுச் சட்டையும், மைசூர்த் தலைப் பாகையும் அணிவார்; மடிப்புக் கலையாத சலவைத் துணியையே பெரிதும் விரும்புவார்.



சேலத்தில் ராஜாஜி வசித்த பங்களா.
(இது உள்ள தெருதான் சேர்மன் ராஜகோபாலாசாரி ரோடு)

சேலத்திலே பெரிய பங்களாவில் அவர் வசித்து வந்தார். வெளியே போய் வரவும், வேலைத்தலத் துக்குச் செல்லவும் கோச்சு வண்டி உண்டு;

பின்னர் மோட்டார் கார் வாங்கினர். அவருக்கு வீட்டிலே குற்றேவல் செய்யப் பணியாளர் பலர் இருந்தனர். பெருஞ்செல்வரும், உயர்குடிப் பிறந்தாரும், சர்க்கார் உத்தியோகஸ்தரும் அவருக்கு உற்ற தோழராய்க் குலாவி நின்றனர்.

செல்வச் சிறப்பினல் ஆடம்பர வாழ்க்கை மேற்கொண்டும், ராஜாஜி தருக்கித் திரியவில்லை; தவருன வழிகளிற் செல்லவில்லை; தீய பழக்கங்களும் கொள்ளவில்லை. செல்வத்துடன் செல்வாக்கும் கூடிக்கொண்டால், கூடாவொழுக்கங்கள் வந்தடைதல் இயற்கை. ஆனலும், கூடாவொழுக்கம் என்பது அவரிடம் தலை காட்டவில்லை; மேனட்டு நாகரிக முறையும் அணுகவில்லை.

கோச்சு வண்டி வைத்துக்கொண்டிருந்த சமயம், குதிரை காங்கேய இனத்தைச் சேர்ந்தது; துடுக்கும் மிடுக்கும் மிகுந்தது. வழக்கம் போல வண்டியில் ஏறி அமர்ந்தார் ராஜாஜி. வண்டியோட்டுபவன் ஏறுவதற்குள், அது ஓட்டம் எடுத்தது. கட்டுக் கடங்காமல் ஓடும் வண்டியில் அவர் ஒருவரே இருக்கிருர்! அது கண்டு, 'குதித்து விடுங்கள்! குதித்துவிடுங்கள்!' என்று பலரும் கூக்குரலிட்டனர். அவர் சிறிதும் அச்சம் அடையாமல், குதிரையின் கடிவாள வாரைப் பற்றிக் கொண்டார்; அதனை அடக்கி நிறுத்த முயன்ருர். அதுவோ, வண்டியைக் கவிழ்க்கவும், சுவரின் மீது தாக்கி மோதவும் பன்முறை முயன்றது; இடக்கெல்லாஞ் செய்து இடுக்கண் விளைக்கவே எண்ணியது. அதற்கு இடந்தாராமல், கடிவாளத்தைச் சுண்டிச் சுண்டி, களைத்துப்போகும் வரையில் குதிரையைச் செலுத்தினர் ராஜாஜி.

முடிவிலே வாயில் நுரை தள்ள அக்குதிரை வீடு வந்து சேர்ந்தது. ஊறு ஒன்றும் எய்தாமல் திரும்பி வந்தமை கண்டு, எல்லாரும் ஆறுதல் அடைந்தனர். 'பிழைத்தாய் அப்பா!' என்று பெரியவரொருவர் சொன்னார். "ஆம்! கட்டுக் கடங்காமல் ஓடும் மனக் குரங்கையும் அடக்கிவிடின் அனைவரும் உய்யலாம்!" என்றார் ராஜாஜி. இது கேட்டு வியந்தார் அப்பெரியவர்.

ராஜாஜி ஒரு நாள் நீதி மன்றத்துக்குப் புறப் படும் சமயம், கேரளவாசியொருவன் வந்து, "நான் ஓர் ஏழை ஆசிரியன். பாடசாலையில் விடை கொண்டு சேலம் வந்தேன். கையிலிருந்த காசு களவுபோய்விட்டது! செலவுக்கு ஒரு தம்பிடி கூட இல்லை!" என்று கூறி இரக்கலானான். "அப்படியா! உள்ளே சென்று உணவு கொள் ளுங்கள். நீதி மன்றஞ்சென்று பிற்பகலில் வரு கிறேன்," என்று கூறிச் சென்றார் ராஜாஜி.

நீதி மன்றம் சேர்ந்ததும், பாலக்காட்டிலே அந்த மனிதன் குறிப்பிட்ட பள்ளிக்கூடத்துக்கு ராஜாஜி தந்தி கொடுத்தார். "**ஹரிஹர ஐயர்** என்னும் ஆசிரியர் இப்போது இங்கே வேலை செய்துகொண்டிருக்கிறார்," என்று சிறிது நேரத் திற்குள் பதில் வந்தது. வந்ததும், பொய் பேசிய தாகப் போலி ஆசிரியன்மீது போலீஸாரிடம் புகார் செய்தார் ராஜாஜி. உடனே அவனைக் கைது செய்து வழக்கு நடத்தினர் போலீஸார்.

குற்றவாளி விசாரணைத் தினத்தில் மாஜிஸ் திரேட்டை நோக்கி, "நான் ஏழை; எனக்கு வக்கீல் வைக்க வகையில்லை," என்று கூறினான். 'குற்றவாளிக்காக நான் காசில்லாமல் வாதாடத்

தயார்!" என்றார் ராஜாஜி. விசாரணை முடிந்தது. இருநூறு ரூபாய் அபராதம் விதித்தார் நீதிபதி. ஏழை இருநூறு ரூபாய் கட்டுவது எப்படி? அவன் திகைத்து நின்றான்.

அபராதத் தொகை அதிகம் என்று ராஜாஜி வாதாடினார். 'அப்படியானால், ஐம்பது ரூபாய் கொடுக்கட்டும்,' என்றார் நீதிபதி. 'அதுவும் அதிகம்,' என்று மீண்டும் ராஜாஜி கூறினார். 'சரி, பத்து ரூபாய் அபராதம்,' என்றார் நீதிபதி. உடனே ராஜாஜி தமது சட்டைப் பையிலிருந்து பத்து ரூபாய் எடுத்து அதனை நீதி மன்றத்தில் கட்டினார்! குற்றவாளி விடுதலை எய்தினான்.

பொய் பகர்ந்ததாகப் புகார் செய்தவர் ராஜாஜி; வழக்கு வந்ததும், ஏழைமீது இரக்கங் கொண்டு, தரும வழக்கறிஞராய் விளங்கினார்; அபராதம் விதித்ததும், தாமே பணத்தைக் கட்டினார். அக்குற்றவாளி திருந்த வேண்டும் என்பதே அவர் கருத்து. அவன்மீது அவருக்கு வர்மமோ பகையோ இல்லை. முறுக்கான வயதிலேயே அத்தகைய மனப்பண்பாடு அமைந்தவர் ராஜாஜி.

'சலம்பற்றிச் சால்புஇல செய்யார், 'மா சற்ற
குலம்பற்றி வாழ்தும்' என் பார்.'

'குற்றமில்லாத குலத்தின் வழியே நடக்க விரும்புவார், கோபங் காரணமாகத் தகாத காரியஞ் செய்யார்,' என்பதே இக்குறளின் கருத்தாம். இனி, ராஜாஜியின் மனப் பண்பாட்டினுக்கு மற்றோர் உதாரணம் தருவோம்:

ஒரு சமயம் ராஜாஜிக்குக் கபச்சுரம் கண்டது. மிகச் சிறந்த மருத்துவர் வைத்தியம் செய்து

வந்தார். ஆனால், அந்நோய் நெடுநாள் நீடித்து நின்றது. ஒருநாள் மருத்துவர் வந்தார்; நோயாளரின் நாடியைப் பரீட்சித்தார்; 'இனிப் பிழையார் இவர்!' என்றார்; 'சிறிது நேரத்துக்குள் ஆவி பிரிந்துவிடும்!' என்று கூறினார்; உடனே அழத் தொடங்கிவிட்டார்.

மருத்துவரே கண்ணீர் வடிப்பதைக்கண்டதும், ராஜாஜியின் உற்றார் உறவினர் கலங்கிவிட்டனர்; கண்ணீர் பெருக்கவும் தலைப்பட்டுவிட்டனர். கொடிய நோய் வாய்ப்பட்டுக் கிடக்கும் ராஜாஜி அதனை உணர்ந்தார்; அருகே இருந்த ஓர் அன்பரை ஜாடை காட்டி அருகில் வரச் செய்தார்; அந்த அன்பர் அருகில் வந்ததும், "வைத்தியருக்கு மூளை கலங்கிவிட்டது! வேறு ஒரு வைத்தியரை வரவழையுங்கள்!" என்று ஈனக்குரலிற் கூறினார்.

அவ்வாறே வேறொரு மருத்துவர் வந்தார். இரண்டு வைத்தியரும் கலந்து, மருந்து கொடுத்து வந்தனர். நாளடைவில் ராஜாஜி குணமடைந்தார்; பழையபடி தொழிலும் பார்த்து வந்தார்.

'ஆற்று வெள்ளம் போலத் துன்பங்கள் திரண்டு வந்தாலும் என்ன? அறிவுடையான் ஊக்கங் குன்றாது முயலின், அத்துன்பங்களெல்லாம் பறந்து போம்,' என்னும் கருத்துடைய

'வெள்ளத் தனைய இடும்பை, அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்'

என்னும் குறள் இங்குச் சிந்தித்தற்குரியது.

அறிவின் மிகுதியினால், மனம் கலங்காது மருத்துவரின் இயல்பை அறிந்து, ஏற்றது உரைத்தார் ராஜாஜி.

# 6. சமூகப் புரட்சி

> 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா
> செய்தொழில் வேற்றுமை யால்'

என்பது பொய்யா மொழி. உருவு, உறுப்பு, உறைவு, உறக்கம், உடுக்கை இவற்றில் மாந்தர் அனைவரும் ஒரு தன்மையரே. ஆயினும், அவரவர் செய்யும் தொழிலைப் பொறுத்து, ஏற்றமும் இழிவும் ஏற்படும்; 'மேலோர் கீழோர்' என்னும் பாகுபாடும் உண்டாகும். பிறப்பினால் மட்டுமே 'உயர்ந்தோர், தாழ்ந்தோர்' எனல் ஒவ்வாது.

'செய்யும் தொழிலையும், கொள்ளும் நடையையும் தழுவி உதித்த ஏற்ற இழிவுகள் பிறப்பைப் பொறுத்துப் புகுந்துவிட்டன நமது சமூகத்தில். இத்தகைய சூழ்நிலையைப் போக்க வேண்டும்,' என்றார் சுவாமி விவேகானந்தர். குலத்தின் கொழுந்து போன்ற இளைஞரே பின்னாளில் ஜன சமூகம் ஆவதால், அன்னாருக்கு அறிவுரை பல பகர்ந்தார் அவர்:

'ஏழைக்கு இரங்கு; பாமரரிடம் பரிவு காட்டு; தாழ்ந்தாரைத் தூக்கி விடு; ஒடுக்கப்பட்டாரை உயர்த்து,' என்பன அவர் கூறிய அறிவுரைகளின் கருத்தாம். சட்ட மாணவராயிருந்தபோதே ராஜாஜி அப்பெரியாருடன் நெருங்கிப் பழகி, அறிவுரைகளை உணர்ந்துகொண்டார் அல்லவா? அத்துடன் நல்லான் சக்கரவர்த்தியின் குலநலமும் அவரது மேன்மைக்குத் தூண்டுகோலாய் நின்றது.

1917-ஆம் ஆண்டிலே சேலம் நகர சபையின் தலைவரானார் ராஜாஜி. அந்நகரிலே நீர்க் குழாய்

களைத் திறந்து மூடிப் பழுது பார்க்கும் வேலையில் ஆதித்திராவிட இளைஞரும் இருந்தனர். அத் தொழிலாளரை அவ்வப்போது இடம் மாற்றுவ துண்டு. அத்தகைய மாற்றத்திலே ஆதித்திராவிடத் தொழிலாளி அங்குள்ள அந்தணத் தெருவிற் குழாய் வேலை பார்க்க நேர்ந்தது.

"நீண்ட நாளாகத் தீண்டாதார் வகுப்பைச் சேர்ந்த ஆதித்திராவிடரை வேதியர் வசிக்குமிடத் தில் வேலைக்கு அமர்த்துவதா!" என்று பலரும் கிளர்ச்சி செய்தனர்; ராஜாஜிக்கு எதிராக எழுந்து, கச்சையும் கட்டினர்; அச்சபையிலே கண்டனத் தீர்மானமொன்றும் கொணர்ந்தனர். அது கண்டு ராஜாஜி அச்சம் கொள்ளவில்லை.

"தற்செயலாய் நிகழ்ந்த காரியம் இது. பொது வேலையிலே சாதி வேற்றுமை காட்டுவதா? உங்கள் கிளர்ச்சிக்குப் பயந்து, நான் அத் தொழிலாளியை மாற்றுவதா? மாற்றின், சாதி வேற்றுமையை நானும் மேற்கொள்வதாக ஏற் படும்," என்று பதில் கூறினர் ராஜாஜி; தீர்மான மும் செல்லாது என்று தள்ளிவிட்டார்.

அது கேட்ட மக்களுக்கு அவர்மீது வருத்தம் ஏற்பட்டது; கோபமும் உண்டாயிற்று. ஆனாலும், 'நல்ல காரியமே செய்தோம்!' என்று நிம்மதி உற்றார் ராஜாஜி.

அங்குள்ள கலாசாலை அந்நகரசபைக்கு உட் பட்டது. அதில் மாணவர் சாப்பிடும் விடுதி உண்டு. அவ்விடுதியிலே வேலை பார்க்கவும் ஆதித்திரா விடரை அவர் நியமித்தார். இது கண்டும் ஜனங் கள் பிணங்கி நின்றார்கள்.

விஜயராகவாசாரியார் போன்ற பெரிய வழக்கறிஞர்களும் பெருமக்களும் ராஜாஜியின் செயலை எதிர்த்துப் பேசினர்கள்; 'அந்தண மாணவர் அவ்விடுதியை விட்டு விலக நேரும்,' என்றும் பயம் காட்டினர்கள். 'அப்படியானல், அம்மாணவரையெல்லாம் கலாசாலையிலிருந்தே நீக்கிவிட நேரும்,' என்று ராஜாஜி சாந்தமாகச் சொன்னர். அவரது உறுதிக்கு முன்னே எதிர்ப்புகளெல்லாம் நாளடைவில் தலை சாய்ந்தன.

சுவாமி **சகஜானந்தர்** என்பவர் நந்தனர் குலத்திற் பிறந்தவர்; வடமொழி தென்மொழிகளில் புலமை மிகுந்தவர்; துறவுக்கோலம் கொண்டவர்; சிதம்பரத்திலே **நந்தனர் கழகம்** என்னும் ஒரு சபையை அமைத்து, அக்குலச் சிறுவருக்குக் கல்வித் தானம் செய்து வந்தவர். பொருளுதவிக்காக அவர் பற்பல இடங்களுக்கும் சென்று வருவார்.

அங்கிலையிலே, அவர் சேலத்துக்கு வந்தார்; ராஜாஜியைக் கண்டு பேசினர். உடனே ராஜாஜி தக்க பொருளுதவி செய்ததுந்தவிர, அவருக்குப் பெருமையளிக்க விருந்தொன்றும் ஏற்பாடு செய்தார். அவ்விருந்திலே உயர்குலத்தவரெனப்படும் வேதியரும் வேளாளரும் சுவாமிகளுடன் ஒரே பந்தியில் அமர்ந்து உணவு கொண்டனர்.

அது கேட்டதும், மறையவர் குலத்தைச் சேர்ந்த பலரும் ஆத்திரம் அடைந்தனர்; ராஜாஜியையும் அவர்தம் நேசர்களையும் சாதியிலிருந்து விலக்கி வைத்தனர்; நாள் கிழமைகளில் அவர்களின் வீட்டுக்குப் போகாதபடி பலரையும் தடுத்தனர்; சடங்கு செய்து வைக்கும் வேதியரையும் தடுத்து நிறுத்தினர்.

சமூகநலம் கருதி மாறுதல் செய்யும் சமயங்களிலே மிக்க எதிர்ப்பும் கிளர்ச்சியும் நேரும். ஆனல், நலம் புரியும் நாட்டமுள்ளார் அவை கண்டு தயங்கார்; பிறரது அவமதிப்பையும் பாரார்; எடுத்த காரியத்தை இனிது முடிப்பதிலேயே கண்ணுயிருப்பர். அத்தகையவர் நம் ராஜாஜி.

நகர சபையின் தலைவராய் இருந்தபோது ஏழைஎளியவர் வசிக்கும் இடங்களையும், தீண்டாதார் என்பார் குடியிருக்கும் சேரிகளையும், ராஜாஜி நேரிற்சென்று பார்ப்பார்; அங்கே மக்களின் சுகவழிக்கு ஆவன எல்லாம் செய்து வைப்பார்; கல்வி வசதியும் தேடி அமைப்பார். ஏழை பங்காளராய்த் துலங்கவே அவர் ஆவல் கொண்டார்.

அந்நாளிலே நகரசபைகளை அவரைப்போலத் திறமையுடன் நடத்தியவர் இல்லை என்னலாம். 'ராஜாஜியைப் போன்ற தலைவர் எல்லா நகரசபைகளுக்கும் வாய்த்தால், எவ்வளவோ நலமாய் இருக்கும்!' என்று மேலதிகாரிகள் புகழ்ந்து பேசி இருக்கிறர்கள். நகரசபை வேலையைக் கவனிக்கையில், வழக்கறிஞர் தொழிலின் வருமானம் குறைந்தது. அதனை அவர் பொருட்படுத்தவில்லை.

பொதுநல வேலைக்கு ஊதியம் இல்லை; உள்ள வரும்படியும் குறையும்; உழைப்பு மிகும்; சலிப்பும் நேரும். இவை எல்லாவற்றையும் எண்ணுமலிருந்தாற்ருன் உண்மையிலே ஊழியம் செய்ய முடியும். இதற்குத் தியாகபுத்தி மிகுதியும் தேவை.

சேலத்திலே குமாரமங்கலம் ஜமீனுக்கு ராஜாஜி வழக்கறிஞராய் விளங்கினர் அல்லவா? இச்சமயம் அதன் தலைவராய் விளங்கும் டாக்டர் சுப்பராயர் வேளாள குலத்தவர். முன்னம் அவர்

நமது மாகாணத்திலே மந்திரியார் வேலை பார்த்தவர். இளைஞராயிருந்த காலத்திலே கலப்பு மணத்தில் அவர் கருத்துக் கொண்டார்.

'ராதா பாய்' என்னும் கன்னட தேசத்து அந்தன மங்கையரை மணந்துகொள்ள அவர் விரும்பினார். அம்மங்கையரும் இசைந்தனர். அந்நாளிலே கலப்பு மணம் மிக அருமை! அதனை முன்னின்று நடத்தி வைக்க வேண்டுமே! தைரியமாக முன் வந்து நடத்தி வைத்தார் ராஜாஜி.

அவ்விதமெல்லாம் சமூகத்திலே புரட்சி செய்வது கண்டு, பலர் அவர் தந்தையாரிடஞ் சென்று முறையிட்டுக்கொண்டனர். அவரோ, பரம வைதிகர். ஆனாலும், "என் மகன் தகாத காரியஞ் செய்யான்," என்றே அவர் பதில் சொல்லி விட்டார். மைந்தரிடம் அவ்வளவு நம்பிக்கை அவருக்கு!

ஜனங்களின் எதிர்ப்பு ஓங்குகின்ற காலத்திலே ராஜாஜியின் தந்தையரான **சக்கரவர்த்தி ஐயங்கார்** சேலத்திலே காலமானார். மரணச் சடங்குகளை நடத்திவைக்க அவர் குலத்தினர் மறுத்தனர். அயினும், ராஜாஜி சோர்வடையவில்லை. தம் நண்பரின் உதவி கொண்டு, ஒருவாறு அச்சடங்குகளையெல்லாம் செவ்வனே செய்து முடித்தார்.

'ஊழி பெயரினும் தாம்பெயரார், சான்ருண்மைக்கு
ஆழி எனப்படு வார்.'

# 7. தேசியவாதி

**பா**ரத மக்களாகிய நமது அடிமைத் தளையை அகற்றி, நமக்குச் சுதந்தர வாழ்வைத் தேடித் தந்தவர் மகாத்துமா காந்தி. ஆதலின், அவரை நம்மவர் எல்லோரும் **தேச பிதா** என்பர். அவருக்கு முன்னே நமது தேசத்தின் பெருந்தலைவராயிருந்தவர் **பால கங்காதர திலகர்** என்பவர். திலகர் மகாராஷ்டிரத்தில் தோன்றிய மறையவர்; மகா மேதை.

'சுயராஜ்யம்' என்று வாயினால் சொல்லவும் அன்று பலரும் அஞ்சிக்கிடந்தனர். அப்போது, "சுயராஜ்யம் எனது பிறப்புரிமை! அதனை அடைந்தே தீருவேன்!" என்று திலகர் வீரவாசகம் பேசினார். அவ்வாசகத்தின்படி காரியம் நடத்த, காங்கிரஸ் மகாசபை மறுத்தது. அது காரணமாக, 1907-ஆம் ஆண்டிலே அம்மகாசபை முறிந்து போயிற்று.

அதனால், 'அதிகாரிகளை நயந்தே நிற்போம்,' என்று நம் தலைவர்களுட்சிலர் தீர்மானம் செய்தனர். அவர்களை '**மிதவாதிகள்**' என்பர் பலரும். 'அதிகாரிகளை எதிர்த்தே நிற்போம்!' என்று சில தலைவர்கள் துணிந்தார்கள். அவர்கள் '**தீவிர தேசிய வாதிகள்**' எனப்படுவார்கள். அவர்களின் தலைவர் திலகர்.

சுயராஜ்யம் பெற வேண்டி, 'ஆங்கிலக் கல்வி முறை வேண்டா; தேசத்துக்கு ஏற்ற கல்வி முறை கொள்வோம்; அன்னியச் சரக்குகளைக் கைவிடுவோம்; சுதேசியத் தொழில்களை வளர்ப்போம்,' என்று திலகர் கிளர்ச்சி செய்தார்; சுயராஜ்யக்

கொள்கையை எங்கும் பரப்பினர். ஆதலினல், திலகரைச் '**சுயராஜ்ய பிதா**' எனல் வேண்டும்.

மிதவாதிகள் என்பவர்கள் தங்களது கொள்கைக்குப் பக்கபலம் தேடி நின்றார்கள் தமிழகத்திலே. **மகாகனம் சீனிவாச சாஸ்திரியார்** என்பார், அவர்களின் சார்பாகச் சேலம் சென்றார்; தம் தோழர் ராஜாஜியின் ஆதரவு கிட்டுமென்று நம்பி நின்றார். பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. தீவிரத் தேசீயக் கொள்கையையே ஆதரித்துப் பேசினர் ராஜாஜி. நகர மாந்தரும் அதற்கு ஒப்பங்கொடுத்தனர்.

திலகரின் தீவிரவாதமே ராஜாஜியின் உள்ளத்தைக் கவர்ந்து நின்றது. அத்திலகரே ராஜாஜியின் ராஜீய குரு நாதராய் விளங்கினர். தூத்துக்குடித் தேசபத்தர் **வ. உ. சிதம்பரம் பிள்ளையும்**, **சுப்பிரமணிய சிவாவும்** திலகரின் கட்சியை நம் தமிழகத்திலே பரப்பி வந்தனர். பிள்ளையவர்கள், கப்பல் கம்பெனியொன்று நிறுவிக் கப்பல் ஓட்டினர்.

கப்பலோட்ட ஏராளமான திரவியம் தேவை ஆயிற்று. அதற்கு ராஜாஜி ஆயிரக் கணக்கில் பணம் சேகரித்துக் கொடுத்தார்; தாமும் மிகுந்த தனம் உதவினர்; திலகரின் நோக்கத்தை ஜில்லா முழுவதும் பிரபலம் செய்தார். அந்நாளில் **சுப்பிரமணிய பாரதியார்**, கவிதைகளின் மூலம் திலகரின் கருத்தை மக்களின் மனத்திலே பதிய வைக்கலானர்.

அத்தேசீயக் கவிஞரின் பாடல்கள் ராஜாஜியின் உள்ளத்தைக் கவர்ந்தன. கவரவே, அவர்

புதுச்சேரி சென்று, அக்கவிராஜரை நேரிற்கண்டு களித்தார்; திலகர் அமைத்த 'ஹோம் ரூல் லீக்' என்னும் சுயராஜ்ய சபையிலும் சேர்ந்து, அந்த இயக்கத்தைத் தழுவி, பற்பல சொற்பொழிவுகள் ஆற்றினர்.

இதற்கிடையில், சென்னை நகரிலே பிரமஞான சங்கத்தின் தலைவியாரான **அன்னி பெஸண்டு** அம்மையார் திலகரின் வழியிலேயே நம் தேசமெங்கும் ராஜீயப் பிரசாரம் செய்துவந்தார். ஆதலின், அந்த அம்மையாருக்கும் ராஜாஜியின் பக்கபலம் வாய்த்தது. திலகரின் கிளர்ச்சியினால் தேசத்திலே மக்களின் துடிப்புத் தலை தூக்கி நின்றது.

அது கண்டு, கண்ணைத் துடைக்கும் பான்மையில் அரசியலிலே ஒரு சிறிது சீர்திருத்தம் செய்ய ஆங்கில அரசாங்கம் கருதியது. அப்போது ஐரோப்பாவிலே முதல் உலகப் பெரும்போர் நடவாநின்றது. மிதவாதிகள் என்பவர்கள் அந்த அரசுக்கு உதவியாக ஆட்களும் பணமும் அனுப்ப வேண்டும் என்றார்கள். இந்நிலையில் காஞ்சீபுரத்திலே சென்னை மாகாண ராஜீய மகாநாடு கூடியது.

அந்த அரசுக்கு எல்லாரும் படை சேர்த்துக் தரவேண்டும் என்று அன்னி பெஸண்டு அம்மையார் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்; தமது சொல் வன்மை அனைத்தையும் காட்டி, மக்களின் உள்ளத்தை ஆட்கொண்டுவிட்டார். தீவிரவாதியான ராஜாஜி அதற்கு எங்ஙனம் இசைவர்?

வீரமே பேசும் **சத்தியமூர்த்தி** எழுந்து, அத் தீர்மானத்தை எதிர்த்து, ஆணித்தரமாகப் பேசி, மக்களின் மனத்தைத் திருப்பினர்; உடனே

ராஜாஜியும் மிக அழகாகப் பேசி, சத்தியமூர்த்தியை ஆதரிக்கலானார். சத்தியமூர்த்தி, ராஜாஜி இவர்களின் தீவிரவாதமும் சீரிய பேச்சும் அப்போதுதான் அனைவருக்கும் நன்கு புலப்பட்டன.

காஞ்சீபுரம் மகாநாட்டிலே மிதவாதம் மண்டையில் அடியுண்டது; தீவிரவாதம் தெள்ளெனத் தலை தூக்கியது. அவ்விருவரின் பெயரும் புகழும் வளரத் தலைப்பட்டன. பின்னர்ப் பம்பாயிலே காங்கிரஸ் மகாசபையின் விசேஷக் கூட்டம் நடைபெற்றது. அதன் முன்னே அச்சீர்திருத்த விஷயம் பற்றி வாதம் நடந்தது.

வாதமும் எதிர் வாதமும் வலுத்தன. தலைவர்களுக்குள்ளே வேற்றுமை மிகுந்தது. பலரும் ஏற்கக்கூடிய வகையில் தீர்மானத்தின் வாசகத்தை அமைக்க முடியாமல் தலைவர்கள் திணறினார்கள். அவ்வேளை ராஜாஜி முன் வந்து, தீர்மானத்தின் வாசகத்தைச் சிறிதே மாற்றியமைத்தார். தலைவர் பலருக்கும் அது கண்டு ஆறுதல் பிறந்தது; ஆனந்தமும் உண்டாயிற்று.

வங்காளத்திலே பெருந்தலைவரான **சித்தரஞ்சன தாஸ்** என்பார், சபையிலே அத்தீர்மானத்தை விளக்கி, விழுமிய சொற்பொழிவு நிகழ்த்தினார். சிலர் அத்தீர்மானங்கண்டு முணுமுணுத்தனர். அப்போது, அவர் நம் ராஜாஜியைச் சுட்டிக்காட்டி, "இந்த மெல்லிய மதராஸி, இங்கும் அங்கும் சில சொற்களை நீக்கியும், சில சொற்களைப் புகுத்தியும், எல்லாரும் வியக்கும் வண்ணம் தீர்மானத்தைப் பண்படுத்தியிருக்கிறார்!" என்று ராஜாஜியின் மதி வன்மையை மிகவும் புகழ்ந்து பேசினார்.

பேசவே, ராஜாஜியின் நுண்ணறிவையும் சமர்த்தையும் அகில இந்தியா உணர்ந்துகொண்டது; அவரை உச்சிமீது கொண்டு கொண்டாடியது. மலர மலர மலரின் மணம் எங்கும் வீசுவதே போல, ராஜாஜியின் மதிநலம் வரவர நன்கு புலப்படலாயிற்று. அத்தகைய புருஷர் சேலத்தை விடுத்து, மாகாணத்தின் தலைநகரில் வந்து வசிக்க வேண்டுமென நம்மவர் அனைவரும் விரும்பினர். அவ்வாறே சிலர் சேலம் சென்று அவரை வேண்டிக்கொண்டனர். அச்சமயம் 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியரான **கஸ்தூரிரங்க ஐயங்காரும்,** அதுவே சரி என்றார்.

ஜனத் தலைமை வந்து சேர்வதற்கு அடையாளமாக மாகாணத்தின் தலைநகரான சென்னைக்கு வந்து குடியேறினர் ராஜாஜி; சென்னையிலே வழக்கறிஞர் தொழில் நடத்தவும் முற்பட்டார். '**சேலம் ராஜகோபாலாசாரி**' என்று எல்லாரும் செல்வமாக வழங்கி, சிறப்புப் பலவும் செய்து வந்தனர்.

# 8. ராஜத்துவேஷ வழக்கு

'சுயராஜ்யமே வேண்டும்,' என்று பால கங்காதர திலகர் பெருங்கிளர்ச்சி செய்து வருகையில், அன்னி பெஸண்டு அம்மையார் அதைத் தொடர்ந்து தமிழகத்திலே தணியாக் கிளர்ச்சி செய்யலானார். அப்போது அரசியல் கூட்டங்களிலெல்லாம் ஆங்கிலத்திலேயே பேசுவது வழக்கம். ஆங்கிலம் அறியாத மக்களுக்கு அரசியல் கிளர்ச்சி புரிய வேண்டுமே! அதற்காக நம் தமிழ்நாடெங்கும் சென்று, தமிழிலே பேசி வருமாறு டாக்டர் **வரத ராஜுலு நாயுடு** சித்தமானார். அவர் மதுரையிலே அரிய சொற்பொழிவு ஒன்று ஆற்றினார். அதனால், பாமர மக்களிடமும் விழிப்பும், துடிப்பும், உணர்ச்சியும், உற்சாகமும் உதித்தோங்கின.

அதிகார வர்க்கத்தார் அது கண்டு அருண்டு போயினர்; மக்களின் கண்ணைத் திறந்து விடும் டாக்டர் நாயுடுவை மடக்கிப்போட விருப்பங் கொண்டனர்; அரசர்பிரான் மீது துவேஷம் உண்டாகும்படி பேசியதாக அவர்மீது ஒரு வழக்குத் தொடுத்தனர். தொடுக்கவே, எதிர் வழக்காட வேண்டுமென்று ஜனங்களுக்குத் துணிவு பிறந்தது. பலரும் அதற்குப் பணவுதவி செய்தனர்.

'நாயுடுமீது வழக்குத் தொடர்ந்தது தவறு. அதனை உலகறியச் செய்ய வேண்டும்,' என்று ராஜாஜி நினைத்தார். அது பற்றி ராஜாஜியே தரும வழக்கறிஞராகி வாதிக்கத் தொடங்கினர். அந்நாளில் சர்க்காருக்கு எதிராக வழக்காடுதல் எளிதன்று. அதிகாரிகளின் கோபத்துக்கு ஆளாக நேரும். மனத்துணிவு உள்ளவரே முன் வர முடியும். மதுரையிலே மாஜிஸ்திரேட்டின் முன்பு

விசாரணை நடந்தது. சர்க்கார்த் தரப்புச் சாட்சிகளை யெல்லாம் குறுக்கு விசாரணை செய்ய எழுந்தார் ராஜாஜி.

அந்நாளில் அதிகாரிகளின் வாக்கிற்கு எதிர் வாக்கு இருக்கக் கூடாது என்ற ஆணவம் தாண்டவம் ஆடியது. ஆதலின், குறுக்கு விசாரணை செய்ய ராஜாஜி எழுந்தபோதெல்லாம், "உட்காரும்! உட்காரும்!' என்று மாஜிஸ்திரேட்டு மமதையுடன் சொல்லி வந்தார். முன்னேறிப் பாய்வதற்காக வேங்கைப் புலி சற்றே பின் வாங்கும். அவ்வாறே முதல் இரண்டு நாள் பேசாமல் உட்கார்ந்து விட்டார் ராஜாஜி.

மூன்றாவது நாளும், 'உட்காரும்!' என்று மாஜிஸ்திரேட்டுச் சொன்னதுதான் தாமதம்! மிகவும் சாந்தமாக — ஆனால் அழுத்தமாக — ராஜாஜி சொன்னதன் கருத்து இது:

"ராஜ்த்துவேஷம் என்பது மாபெருங்குற்றம். அத்தகைய வழக்கை நீதிபதி விசாரித்தல் இதுவே முதல் தடவையாகும். சர்க்காரின் பக்கம் வாதாடும் வழக்கறிஞருக்கும் அத்தகைய வழக்கில் இதுவே முதல் அனுபவமாகும்; எனக்கும் அப்படித்தான். எதிரிக்கும் இதுவே முதல் விசாரணையாகும். இத்தகைய கடினநிலைமையில் நான் என்து கடமையை ஆற்றித் தீரவேண்டும்! ஆகவே, நீதிபதி எனது குறுக்கு விசாரணைக்குச் சமயம் அளிக்க வேண்டும். அவ்வாறு அளியாமல், குறுக்கிடுதல் நீதியன்று; 'உட்காரும்! உட்காரும்!' என்று கூறுவதும் நேர்மையன்று; பாடசாலையின் மாணவனைப்போல என்னை நடத்துதலும் நீதி ஸ்தலத்தின் மதிப்புக்கு ஏற்றதன்று. நீதிபதியிடம்

எனக்கு மிக்க மதிப்புண்டு. ஆயினும், இதனைச் சொல்லித் தீருதல் எனது கடமையாகும்!"

அவ்விதம் உரைத்த பின்பே, ராஜாஜியின் உள்ளத்திறனையும் தள்ளரிய நாவின் நலத்தையும் எல்லாரும் கண்டுகொண்டனர். நீதிபதியும் தமது பிழையை உணர்ந்து, மன்னிப்பு வேண்டினர்.

'நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉ மன்று.'

கல்வி நலம், செல்வ நலம் என்பன போலச் சொல் நலமும் சிறந்ததாம். அச்சொல் நலமே எல்லா நலங்களிலும் சிறந்ததொன்ருகும். அந்நாநலத்தின் முன்னே நீதிபதி பணிய நேர்ந்தது.

அவ்வழக்கு நெடுக நடைபெற்றது. ராஜத்துவேஷ வழக்குத் தொடர்வதானல், மாகாணச் சர்க்காரின் உத்தரவு பெற்றே தொடர்தல் வேண்டும். அவ்விதம் அதிகாரிகள் உத்தரவு பெறவில்லை என்று ராஜாஜி கூறினர். 'முற்றும் சரியான முறையில் உள்ளது!' என்று சர்க்கார்த் தரப்பு வழக்கறிஞர் பதிலுரைத்தார். வழக்கிலே அந்த உத்தரவு விஷயமே உயிர் நிலை போன்றது. இதனைச் சர்க்கார் வழக்கறிஞர் நன்கு கவனிக்கவில்லை.

அவ்விஷயத்தை மேலும் வற்புறுத்தினல், சர்க்கார் வழக்கறிஞருக்கு விழிப்பு உண்டாகிவிடும் என்பதை ராஜாஜி கூர்ந்தறிந்தார்; "எனது மறுப்பை மட்டும் குறித்துக்கொண்டு மேலே வழக்கை நடத்தலாம்," என்ருர். மாஜிஸ்திரேட்டும் ராஜாஜி எழுப்பிய மறுப்பில் சட்டநுணுக்கம் உண்டென்பதைக் கண்டுகொள்ளவில்லை.

வழக்கு நடந்தது. ராஜத்துவேஷமாகப் பேசியதாக டாக்டர் நாயுடுவுக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. 'சென்னையிலுள்ள உயர்நீதி மன்றத்திலே அவ்வழக்கு அடிபட்டுப்போம்; தண்டனையும் தள்ளுபடியாகிவிடும்,' என்று அப்போதே தம் நண்பர்களிடம் ராஜாஜி உரைத்தார். அதன்படி சென்னை உயர்நீதி மன்றத்திலே மறு விசாரணைக்கு விண்ணப்பம் தாக்கல் ஆயிற்று.

அச்சமயம் அவ்வுயர்நீதி மன்றத்தின் பெரிய வழக்கறிஞருள் ஒருவர் **கே. சீனிவாச ஐயங்கார்.** டாக்டர் நாயுடுவின் பக்கம் அவர் வாதாடினார்; கீழ்க் கோர்ட்டிலே ராஜாஜி எழுப்பிய மறுப்பையே அவர் ஆதாரமாகக் கொண்டு வாதித்தார். மாகாண சர்க்காரின் அநுமதியில்லாமல் வழக்குத் தொடர்ந்தது தவறென்னும் தீர்ப்பு ஏற்பட்டது. நாயுடு விடுதலை அடைந்தார்.

வழக்குத் தொடர்ந்த அதிகாரிகள் கையைப் பிசைந்து நின்றார்கள். ஜனங்களோ, ஆறுதலும் ஆனந்தமும் எய்தினார்கள். ராஜாஜி உடனிருந்து உதவிய உயர்வைக் குறித்துச் சீனிவாச ஐயங்கார் அவரைப் புகழ்ந்து பேசினார். அறிவின் பெருமையே பெருமையல்லவா? ஆதலின், நாயனாரும்,

> **'அறிவுடையார் ஆவ தறிவார்; அறிவிலார்**
> **அஃதறி கல்லா தவர்.'**

என்றார். 'ஆகும் காரியம் எது? அதற்குரிய உபாயம் யாது?' என்பவற்றை அறிபவரே அறிஞர். அவற்றை அறியாதவரை அறிஞர் என்பது எப்படிப் பொருந்தும்?' என்பதே இத்திருக்குறளின் கருத்தாம்.

# 9. காந்தி நேசம்

**ப**ணங்காசு கருதியும், பலனை நோக்கியும் ஒருவரை ஒருவர் நேசித்தல் உலக நடப்பாம். பணமோ, பலனோ வறண்டுவிடின், அந்நேசம் அற்றுப்போம். எனவே, அஃது உண்மையான நேசம் ஆகாது. உள்ளத்தின் ஒற்றுமையினால் உண்டாகும் நேசமே, உண்மையான நட்பாம்; உயரிய நட்பும் ஆம்.

காந்தியும் ராஜாஜியும் ஒத்த உள்ளப்பான்மையினால் நேசராயினர். இருவர் உணர்ச்சியும் கருத்தும் ஒன்றாகவே இருந்தன. அதனால், அந்நட்பு வரவர முதிர்ந்து, விழுப்பம் எய்தியது; அதனை உலகம் வியக்கவும் நேர்ந்தது. அந்நட்பு உதித்த விதத்தையும் ஓங்கிய வகையையும் கவனிப்போம்:

பாலும் தேனும் வழிந்தோடிய நமது பாரத பூமி, ஆங்கில ஆட்சியின் காலத்திலே பரம வறுமைக்கு ஆளாயிற்று. ஆகவே, வயிற்றுப் பிழைப்பை நாடி, நம்மவருட்பலர், தென்னாப்பிரிக்கா போயினர். அதற்கு ஆங்கில அரசாங்கமும் உதவியாய் இருந்தது. அவ்விதம் போன மக்கள் தங்கள் உழைப்பினால் அந்நாட்டை நன்கு வளம் படுத்தினார்கள்.

'காரியம் ஆகும் வரையில் காலைப்பிடி; காரியம் ஆன பின்போ கழுத்தை நெரி,' என்னும் ஒரு பழமொழி உண்டு. நாட்டை வளம்படுத்திய பின்பு, அங்கேயே தங்கி வாழ நம்மவருட்பலர் விரும்பினர். அப்போது தென்னாப்பிரிக்கா வெள்ளையர், அப்பழமொழியை மெய்ப்பிக்கலாயினர்.

வக்கீல் தொழில் நடத்திப் பணம் திரட்ட அங்கே சென்றிருந்த மகாத்துமா காந்தி, அவ் வஞ்சக நிலையை உணர்ந்தார்; உடனே நம்மவருக்கு ஊழியம் புரிய முனைந்தார்; வல்லமையெல்லாம் படைத்த வெள்ளையரை எதிர்க்க வழி கோலினார். அவ்வழி உலகத்துக்கே ஒரு புதுமை; பிரகலாதன் பின்பற்றிய வழியாம்.

'இரணியன் எத்துணையோ துன்பம் செய்தும், எல்லாவற்றையும் பொறுத்து நின்றான் பிரகலாதன்; 'சத்தியமும் கடவுளுமே கதி,' என்றும் இருந்தான். அவ்வாறே, வெள்ளையரிழைக்கும் கொடுமை கண்டு, நாம் பொறுத்து நிற்போம்; ஏட்டிக்குப் போட்டியாக நாமும் கொடுமை இழைக்க வேண்டா; ஆனால், எல்லாருஞ்சேர்ந்து, சாத்துவிக முறையில் எதிர்த்து நிற்போம்,' என்றார் காந்தியடிகள்.

"தெருவிலே நடக்கக்கூடாது; வண்டியிலே ஏறக்கூடாது,' என்றால், நடப்போம்; ஏறுவோம்; அதற்காக அவர்கள் அடித்தால், பட்டுக்கொள்வோம்; பிடித்துத் தள்ளினால், சிறை புகுவோம்," என்று கூறி அவர் அங்ஙனமே நடந்து காட்டினார்; பிறரையும் நடக்கச் செய்தார். முடிவிலே அச் சாத்துவிக எதிர்ப்பின் வேகங்கண்டு, அவ்வெள்ளையர் திகைத்தனர்; பின்னர் நம்மவருடன் ஓர் உடன்பாட்டுக்கு வந்தனர்.

இவ்விதம் மகாத்துமா காந்தி அங்கே சத்தியப் போர் நடத்தி வந்ததை இங்கே நம்மவருள் ஒரு சிலரே கூர்ந்து கவனித்தனர்; அந்த நுட்பத்தையும் அரிய சத்தியையும் ஆய்ந்து அறிந்தனர்; உள்ளத்திலே உணர்ச்சி மிகுந்து, அவரைப் போற்றியும்

வந்தனர். அரிய செயல், புதிய முறை இவை கண்டால் ஆர்வம் மிகுந்து அறிந்துகொள்ளுதலே அறிவுடைமை எனப்படும்.

அத்தகைய அறிவு படைத்தவர் ராஜாஜி. ஆதலின், தென்னுப்பிரிக்காவிலே மகாத்துமா காந்தி நடத்தி வந்த போராட்டத்தைப் பத்திரிகை மூலமாகப் படித்துப் பார்த்து, அறிவின் நலத்தினுல் அதன் பலாபலனை ஊடுருவி நோக்கி வரலானுர்.

தென்னுப்பிரிக்காவிலே அந்தப் போராட்டம் தீர்ந்ததும் மகாத்துமா காந்தி இந்தியாவுக்குத் திரும்பி, அதே பான்மையில் இங்கே சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்த நினைத்தார்.

திலகர் நடத்தி வந்த கிளர்ச்சியினுல், தேசத்திலே அரசியல் துடிப்பு எங்கும் தலையெடுத்தது. அதனை அடக்க அதிகாரிகள் கொடுமையான வழிகளைக் கையாண்டார்கள். அக்கொடுமை தாங்காமல், வாலிபருட்சிலர் வெடிகுண்டு வீசியும், கைத் துப்பாக்கியினுல் சுட்டும் அதிகாரிகளை அச்சுறுத்தி வந்தனர். பயங்கரமான அப்புரட்சி இயக்கம் தேசத்திலே வேரூன்றிவிட்டது.

அந்நிலையில் ஐரோப்பாவிலே முதல் உலகப் பெரும்போர் மூள, அதில் இங்கிலாந்தின் பாடு திண்டாட்டமாயிற்று. இந்தியாவின் உதவியின்றேல், அந்தப் போரில் ஈடு கொடுக்க முடியாதென்பதை ஆங்கில மந்திரிகள் அறிந்துகொண்டார்கள்; மகாயுத்தம் தீர்ந்ததும், அரசியலிலே அரிய திருத்தம் செய்வதாக வாக்களித்தார்கள்; அவ்வாறே ஒரு சிறிது சீர்திருத்தமும் செய்தார்கள். அது கண்டும் தேசத்தில் சாந்தி ஏற்படவில்லை.

புரட்சிவீரர் பொங்கி எழுவரென அதிகாரிகள் அஞ்சினார்கள்; அதற்காக **ரௌலட்டுச் சட்டம்** என்னும் ஒரு சட்டம் செய்தார்கள். அதன்படி எத்தகைய பெரிய மனிதரையும் ஒரு சிறிய போலீஸ்காரன் கைது செய்து, விசாரணை செய்யாமற் சிறையில் அடைத்துவிடலாம். அத்தகைய கொடிய சட்டம் பிறந்ததும் மகாஜனங்களின் மனக் கொதிப்பு வீறிட்டெழுந்தது.

அதனால் அனர்த்தம் நேரும் என்று மகாத்துமா கருதினார்; அக்கொதிப்பை மிகவும் சாந்தமான வழியில் செலுத்த அவர் நினைத்தார்; அதற்காகச் **சத்தியாக்கிரக இயக்கம்** என்பதைத் தோற்றுவித்தார்; தேசத்திலே பற்பல இடங்களுக்கும் சென்று, பிரசாரம் செய்து வந்தார். அந்நிலையில் அவரை நம் சென்னைக்கு அழைத்தார் ராஜாஜி; தமது வீட்டிலே விருந்தினராகவும் கொண்டார்.

சென்னை மாகாணத்தில் அறிஞர் அனைவரும் ராஜாஜியின் வீட்டில் கூடினார். அவர்களுக்கு அந்த இயக்கத்தின் உண்மைப் பொருளை எடுத்துரைத்தார் மகாத்துமா காந்தி. ராஜாஜியும் அதனை இன்னும் விளக்கமாக உரைக்கலானார். அவ்விளக்கவுரை கண்டதும் சேலம் விஜயராகவாசாரியார் அதிசயம் பூத்துப் பேசியது இது:

"மகாத்துமாஜி, உங்களது சத்தியாக்கிரக இயக்கத்தைக் குறித்து நீங்கள் ஏதேனும் நூல் எழுதியிருக்கிறீர்களா? அதனை ராஜகோபாலாசாரியார் வாசித்திருக்க வேண்டும். அல்லாவிடில் இவ்வளவு விளக்கமாக அவர் உரைக்க முடியாது!"

ராஜாஜியின் விளக்கவுரை கண்டு வியந்த காந்தி மகானும், "நான் புத்தகம் எதுவும் எழுதி

வைக்கவில்லை. எப்படியோ என் இயக்கத்தை நன்கு அறிந்திருக்கிறார் ஆசாரியார்!" என்று கூறிக் களித்தார். அது முதல் ராஜாஜியிடம் காந்திக்கு ஓர் அன்பு உதித்தது. ராஜாஜிக்கும் காந்தியிடம் பாசம் பிறந்தது. இயக்கத்தை நன்றாக நடத்துவதற்கு ஒரு கமிட்டி ஏற்பட்டது. அதற்கு ராஜாஜியே காரியதரிசியாராய் இருக்கவேண்டும் என்றார் காந்திமகான்.

பின்னர் ராஜாஜி சென்னை மாகாணமெங்கும் சென்று, அந்த இயக்கத்தின் மெய்ப்பொருளை விளக்கி வந்தார். அவரது விளக்கவுரை கேட்டறிந்த பலரும், ராஜாஜியைக் 'குட்டி காந்தி' என்று செல்வமாக வழங்கத் தொடங்கினர். அதன் பின், இருவருக்கும் இடையே அன்பு முதிர்ந்து நேசமாய் மாறியது.

> 'புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்.'

என்றார் பொய்யில் புலவர். முன்னம் பேசிப் பழகி நெருக்கம் கொள்ளாவிட்டாலும், கருத்தின் ஒற்றுமையினால் நட்பு என்பது ஏற்படும். அவ்வாறே, இருவருக்கும் இடையே அன்பு அரும்பியது, நட்பின் வடிவு கொண்டது. இருவருக்கும் இருந்த உள்ளப் பான்மையே இதற்குக் காரணம்!

# 10. போர் மூட்டம்

அநீதியான ரௌலட்டுச் சட்டத்தை எதிர்ப்பதற்கு ஆயத்தம் வேண்டும் அல்லவா? ஆனது பற்றி, 1919-ஆம் ஆண்டு ஏப்பிரில் மாதம் இரண்டாவது வாரம் சத்தியவிரதவாரமாகும் என்றார் காந்தி மகான். இமயம் முதல் குமரி வரையில் உள்ள மாந்தர் அனைவரும் அவ்வாரத்திலே சத்திய விரதம் பூண்டனர்:

அவ்வாரத்திலே ஒரு நாள் அனைவரும் உண்ணு நோன்பிருந்தனர்; தத்தம் அலுவல்களை யெல்லாம் நிறுத்தி வைத்தனர்; காலையிலே ஆண்டவனைத் தொழுது, மாலையிலே பொதுக்கூட்டம் கூட்டினர்; சத்திய வழியில் அச்சட்டத்தை எதிர்ப்பதாகச் சபதமும் பூண்டனர். படித்தவர், பாமரர், செல்வர், வறியவர், ஆண், பெண்—இப்படி எங்கும் மக்கள் திரளுவதைக் கண்டு அதிகாரிகள் பொறுக்க வில்லை.

பஞ்சாபு மாகாணத்திலுள்ள **அமிருதஸரஸ்** நகர வாசிகள் ஏப்பிரில் 13-ஆந் தேதி அங்கே **ஜாலியன் வாலாபாகு** என்னும் தோட்டத்திலே கூடினர். ஜனக்கூட்டம் முப்பதாயிரத்துக்கு மேலிருக்கும். அத்தோட்டத்துக்கு ஒரே வாயில்—மற்ற இடமெல் லாம் பெரிய சுவர்கள். அவ்வாயிலிலே வந்து நின்றுகொண்டான் **ஜெனரல் டயர்** என்னும் ஆங்கில தளகர்த்தன்; தன் படைஞரை அணிவகுத்தான். உடனே அக்கூட்டத்தின்மீது சுடத் தொடங்கி விட்டான். தோட்டாக்கள் தீரும் வரையிற் சுட்டுத் தள்ளினன் ஜனங்களை! அதனால், நூற்றுக் கணக் கில் மக்கள் மாண்டார்கள். இன்னும் பலர் பலத்த காயம் அடைந்தனர். அது '**பஞ்சாபு படுகொலை**' எனப்படும். அப்படுகொலைக்கு அதிகாரிகள் பரி

காரஞ் செய்யவில்லை. ஆனால், டயருக்கு வெற்றி வாள் பரிசளிக்கப்பட்டது.

அது காரணமாகப் பெரும்போர் நடத்தியே தீரவேண்டுமென்று மகாத்துமா முடிவு செய்தார். காங்கிரஸ் மகாசபையும், 'சரி!' என்றது. தேசத் தலைவர்களும் போரில் ஈடுபட முன் வந்தார்கள். அஹிம்ஸா முறையில், அன்பின் வழியிற் போர் நடத்துவதே மகாத்துமாவின் கொள்கை; 'கூழுக்கு மாங்காய் தோற்குமா?' என்ற கொடுமை விளைக்கும் முறை அன்று.

'அதிகாரிகள் மிருக பலத்தைக் கையாண்டால் நாம் நமது ஆன்ம பலத்தை நம்பி நிற்போம்! அவர்கள் கொடுமை புரியின் நாம் அன்பே கொள்வோம்! அவர்களை வெறோம்! அவர்களுக்கு இடரும் புரியோம்! எத்தகைய கஷ்ட நஷ்டத்தையும் பொறுத்து நின்று, சாந்த வடிவாய் விளங்குவோம்!' என்பதே சத்தியப் போரின் அடிப்படை.

போரின் விவரம் யாதெனில், 'அன்னிய அதிகாரிகள் நடத்தும் கலாசாலைகளைத் துறந்து, மாணவர் வெளியே வரவேண்டும்; அரசாங்கத்தின் நீதிமன்றங்களை எல்லாரும் துறக்கவேண்டும்; சட்ட சபைகளுக்குப் போகாமல் இருக்க வேண்டும்; அன்னியத் துணியைக் கட்டிக்கொள்ளாமல், கதராடையே தரிக்க வேண்டும்,' என்பதாம்.

இது தவிர, 'மதுபானத்தைக் கைவிட வேண்டும்; தீண்டாமையை ஒழிக்க வேண்டும்; எல்லாரும் ஒற்றுமை கொள்ள வேண்டும்; தேசத்துக்கு ஒத்த தேசியக் கல்வியே பயில வேண்டும்; சுதேசத் தொழில்களை ஆதரிக்க வேண்டும்; சுதேசச் சாமான்களையே கையாள வேண்டும்.' இவையும் அப்போரின் விவரங்களாம்.

மகாஜனங்கள் தன்னுடன் யாதொரு விதத்தி லும் தொடர்போ ஒத்துழைப்போ கொள்ளாவிடின் அரசாங்கத்துக்கு மதிப்பு ஏது? ஜன சம்மதம் இல்லாமல் அது நடப்பது எவ்வாறு? இத்தகைய போர் முறை, '**ஒத்துழையாப் போர் முறை**' எனப் படும். இம்மாதிரி உலகிலே வேறெங்கும் போர் முறை வகுக்கப்பட்டதில்லை. மகாத்துமாவின் உள் ளத்தை நன்குணர்ந்த ராஜாஜி, இதில் முழுமனத் துடன் ஈடுபட்டார்; தமிழகத்திலே காந்தியடிகளின் தளபதியுமானார்.

ஆகவே, தம் தோழர்களுடன் ராஜாஜி தமிழக மெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்தார்; ஊர் ஊராகச் சென்று, போரின் திட்டங்களை விளக்கி உரைத்தார். மக்களுள் பலரும் அவரது வார்த் தைக்குச் செவி சாய்த்தனர். ஆயிரக் கணக்கான மாணவர் கலாசாலைகளைத் துறந்தனர்; வழக் கறிஞர்களும் நீதி மன்றங்களுக்குப் போகாமல் நின்று விட்டார்கள்.

ராஜாஜியின் பெயர் எங்கும் பெருமை அடைந் தது. அவருக்கு என்றுமில்லாச் செல்வாக்கும் சிறப்பும் ஏற்பட்டன. மக்களுட்பலரும் அவரை ஒரு தெய்வப் பிறவி என்றே மதிக்கலாயினர். அவருக்கு முன்னமே அரசியலில் ஈடுபட்டிருந்த தலைவர்களோ, ஒதுங்கிவிட்டார்கள். ராஜாஜியே காங்கிரஸ் மகாசபையின் செயலாளராகிச் சிறக்க லானார்.

மக்களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அதிகாரிகள் கண்டு வெருண்டார்கள்; தேசத்தின் துடிப்பைக் கண்டு, 'யாது நேருமோ!' என்று நடுங் கினார்கள். இன்னது செய்வது என்பதே அவர்க ளுக்குத் தோன்றவில்லை. அதற்கு முன்பெல்லாம்

போலீஸ்காரனைக் கண்டால் போதும்! பலரும் பயந்தோடி ஒளிந்துகொள்வர்.

ராஜாஜியின் பிரசாரம் வலுத்த பின்போ, 'அதிகாரிகளெல்லாம் நம்மிடம் சம்பளம் வாங்கிச் சாப்பிடுபவர்களே. எனவே, அவர்களைக் கண்டு நாம் அஞ்சுவதேன்? அவர்களன்றோ நமக்கு மரியாதை செய்ய வேண்டும்? நமது நலத்தை உணராத அரசாங்கம் நமக்கு எதற்கு? அதிகாரிகளும் எதற்கு?' என்று பொது மக்கள் பேசவும் நடக்கவும் தலைப்பட்டார்கள்.

மக்களின் பக்கப்பலம் இன்றேல், அரசாங்கத்துக்கு நிலை ஏது? நிம்மதியும் ஏது? எனவே, 'ஜனங்களைக் கிளப்பி விடும் வழியைத் தடுக்க வேண்டும்,' என்று அதிகாரிகள் தீர்மானித்தார்கள்.

'மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை; அஃதுஇன்றேல்
மன்னுவாம் மன்னர்க்கு ஒளி.'

அரசனோ, ஆட்சியோ நிலைக்க வேண்டுமாயின், நேர்மை வேண்டும்; நீதி வேண்டும். அவை இன்றேல், அரசனுக்குக் கீர்த்தி ஏது? நிலையும் ஏது? இதனை அதிகாரிகள் உணர்ந்துகொள்ளவில்லை. அடியும் உதையும் காட்டி ஆட்சி நடத்தியே அதிகாரிகளுக்குப் பழக்கம். அடிக்கும் உதைக்கும் இடமின்றி, அன்பு வழியில் நடக்கும் காங்கிரஸ்காரரை என்ன செய்வது?

'ஒத்துழையாப் போரைக் கண்டு யான் மலைக்கின்றேன்! மயங்குகின்றேன்!' என்றார் அப்போது இருந்த அரசப் பிரதிநிதி. அத்தகைய நிலையை உண்டுபண்ணி வந்த ராஜாஜியை என்ன செய்வது? அவர் வாயைக் கட்டிவிட வேண்டும் என்று அதிகாரிகள் நினைத்தார்கள்.

# 11. சிறை வாசம்

தமது நேசருடன் சேர்ந்து ஊர் ஊராகச் சென்று பேசி வந்த ராஜாஜி, 1921-ஆம் ஆண்டின் இறுதியிலே **வேலூர்** சேர்ந்தார். சேர்ந்ததும், பொதுக் கூட்டங்களில் அவர் பேசக் கூடாது என்று அதிகாரிகள் ஆணையிட்டார்கள். ஒத்துழையாப் போரில் சேர்ந்த அனைவரும் அவசியமானல் ஆருயிரையும் வழங்குவதாக வாக்களித்திருந்தனர். அந்நிலையில் அதிகாரிகள் 'பேசாதே!' என்றால், ராஜாஜி பேசாதிருக்க இயலுமோ? கோட்டை மைதானத்திலே தடை உத்தரவை அவர் மீறினர்; பொதுக்கூட்டத்திலே பேசினர். உடனே போலீஸார் அவரைச் சிறை செய்தனர். நீதிபதியோ, அவருக்கு மூன்று மாதம் சிறைவாசத் தண்டனை விதித்தார்.

கொலையும் களவும் புரிபவருக்குச் சிறைவாசம் கிட்டுதல் இயற்கை. 'அரசு திருந்த வேண்டும்; நாடு நலம் பெற வேண்டும்; மக்கள் சுகமே வாழ வேண்டும்,' என்று போராடுவதற்காகச் சிறை வாசம் என்பது சிரிப்புக்கு இடமல்லவா? என்றாலும், சிறைச்சாலையைச் சுயராஜ்யத் தவச்சாலையாகக் கொண்டார் ராஜாஜி. மகாத்துமா காந்தி அது கேட்டு, ஆசி கூறினர் அவருக்கு.

தனிப்பெருந்தலைவர் சிறைப்பட்டார் என்பதைக் கேட்டதும், தமிழகத்திலே காங்கிரஸ் தொண்டர் பலரும் சட்டத்தை மீறிச் சிறைக்கோட்டம் நண்ணினர். சிறைச்சாலைகள் நிரம்பிவிட்டன என்றே சொல்லலாம். சிறை புகுவதிலே நான் முன்னே, நீ முன்னே என்று தொண்டருக்குள்ளே போட்டி ஏற்பட்டது.

ராஜாஜி சிறை சென்றுவிட்டாலும், தமிழகத்திலே அப்போரின் வேகம் தணியவில்லை; மக்களின் உற்சாகமும் குன்றவில்லை. அது கண்டு ராஜாஜியின் செல்வாக்கை அனைவரும் புகழ்ந்து பேசினர்.

ராஜாஜிக்குக் காசநோய் என்பது ஏற்கெனவே உண்டு. சிறை புகுந்த சமயத்தில் அந்நோய் அதிகரித்தது. அதனால், அவர் உடம்பு பெரிதும் வருந்தியது. அத்துடன் காலிலே கிளம்பிய கட்டியும் சிரங்கும் கூடிக்கொண்டு அவரை வாட்டின. அந்நிலையிலும் அவர் மனம் கலங்கவில்லை. இந்திரபோகத்திலே வாழ்ந்தவர், அச்சிறையிலே கல்லும் மணலும் கலந்த உணவையே கொள்ள நேர்ந்தது. படுக்கவோ, கிழிந்த கம்பளி ஒன்றுதான். தலையணை என்பது ஏது!

இரவிலே ஓர் அறையில் விட்டுப் பூட்டிவிடுவர். அப்போது ஒரு சட்டியிலேயே மலஜலம் கழிக்க வேண்டும். விடியற்காலையில் அச்சட்டியை அவரே வெளியில் கொண்டுவந்து வைக்க வேண்டும். தேசபக்திக்கு உரிய தியாகத்தையும் கஷ்டத்தையும் பாருங்கள்!

நியாயமான கருமம் கருதியே சிறை புகுந்ததாக அவர் கருதி நின்றார்; அதனை ஒரு பாக்கியமாகவும் எண்ணியிருந்தார். சிறைக்குள்ளே பொழுது போக வேண்டுமே! அங்கே தாம் கண்ட காட்சியையும் பலனையும் அவர் தினம் குறித்து வந்தார். **'சிறை வாசக் குறிப்பு'** என்று அதுபெயர் பெறும். ஆங்கிலத்திலே அதனை எழுதிவந்தார் அவர். பின்பு அது தமிழிலும் வெளிவந்தது.

கிரீஸ் தேசத்திலே மகா ஞானியார் ஒருவர் இருந்தார். அவர் பெயர் **சோக்கரதர்** என்பது. அவரும் சிறையிலே கிடக்க நேர்ந்தது. அவரது அறிவுரைகள் பொன்னே போலப் போற்றத் தக்கன. அவரது வாழக்கைச் சரிதத்தையும் ராஜாஜி தமிழிலே எழுதி வந்தார். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் அல்லவா?

'தாய் மொழியாம் தமிழ் மொழியிலேயே நூல் எழுத வேண்டும்,' என்னும் கருத்து அப்போதே ராஜாஜிக்குப் புலப்பட்டது. பின்னர் அவர் வரைந்த நூல்களோ, பலவாகும். 'இரும்பு பிடித்தவன் கையும் சிரங்கு பிடித்தவன் கையும் சும்மா இரா!' அறிவு படைத்தவரின் கை சும்மா இருக்குமோ?

1922-ஆம் வருஷம், மார்ச்சு மாதம், 20-ஆந் தேதி ராஜாஜியின் சிறைவாசம் நீங்கியது. உடனே அவர் விடுதலையடைந்தார். சிறை வாயிலிலே **திரு. ஈ. வே. ராமசாமி நாயக்கரும்** மற்றொருவரும் அவரை வரவேற்கக் காத்திருந்தனர். அவர் விடுதலையாகும் விஷயம் பலருக்கும் தெரியாமலே இருந்தது. ஆனாலும், இளைஞருட்சிலர் எப்படியோ அதனை அறிந்துகொண்டு, அவருக்கு மாலை மரியாதை செய்ய முயன்றனர். அது கண்டு அவர் மகிழ்ச்சியடையவில்லை. 'காதுங்காதும் வைத்தது போல வெளியே வரவேண்டும்,' என்றே அவர் எண்ணியிருந்தார்; ஆடம்பரம் ஏதும் இன்றியே இருக்க இச்சை கொண்டார்.

பத்திரிகை நிருபர்கள் வந்து பேட்டி கண்ட போது, சிறை வாழ்க்கையைக் குறித்து ஏதும் உரைக்க அவர் மறுத்துவிட்டார்; மாலையில் அவரை

வரவேற்க நடந்த பொதுக் கூட்டத்திலும் அவர் ஏதும் பேசவில்லை. அவர் வெளி வந்ததும், மகாத்துமா காந்தியையும் அரசாங்கம் சிறை செய்து, ஆறு வருஷத்தண்டனை விதித்தது.

விதிக்கவே, மகாத்துமா நடத்திவந்த யுவ இந்தியாப் பத்திரிகையை நடத்தும் பொறுப்பு ராஜாஜியின் தலையிற்சுமந்தது. போரின் தலைவர் சிறைக்குள் கிடக்கையில், அப்போரின் தத்துவத்தையும் உட்கருத்தையும் அவரே தெள்ளத்தெளிய விளக்கி வந்தார்.

இதற்கிடையிலே அரசாங்கம் கடுமையான அடக்கு முறைகளை மேற்கொண்டது. ஆயிரக் கணக்கில் தேசபக்தர் சிறை புகுந்தனர். மகாத்துமாவுக்குப் பின் வழிகாட்ட ராஜாஜியையே தேசம் எதிர் நோக்கி நின்றது. அவரது எழுத்தினாலும் பேச்சினாலும் அவரது தகவும் திறனும் வெளிப்பட்டன. இந்தியா முழுவதும் அவற்றைக் கண்டு களிக்கலாயிற்று.

பின்பு, வங்காளத் தலைவரான சித்தரஞ்சன தாஸ், ஐக்கிய மாகாணத் தலைவரான பண்டித மோத்திலால் நேரு என்னும் இருவரும் சிறையை விட்டு வெளியே வந்தனர்; தேசத்தைச் சூழ்ந்துள்ள சோர்வைக் கண்டு சிந்தாகுலம் கொண்டனர்; 'சட்டசபையிற் புகுந்துள்ள சுயநலக்காரர்களை விரட்ட நாம் அச்சபைக்குட் புகவேண்டும்,' என்றனர்.

ஒத்துழையாப் போரிலே சட்டசபைப் பகிஷ்காரம் ஒரு கூறுகும். காந்தி மகான் சிறையிற் கிடக்கையில் அவர் வகுத்த திட்டத்தை எங்ஙனம் மாற்றுவது? மாற்ற வேண்டுமென வாதாடும்

தலைவர்களோ, மிகப்பெரிய மனிதர்கள்; சிறந்த தேசபத்தர்களுமாவார்கள். அவ்விருவரின் வாதங்களையும் எதிர்க்கும் பொறுப்பு முற்றும் ராஜாஜியையே சார்ந்தது.

சித்தரஞ்சன தாஸரோ, பேச்சிலே மிக்க சதுரர்; ராஜாஜியைவிட மிகவும் பிரபலமான மனிதர். அத்தகைய தாஸர், தேசத்தின் முன்னே சென்று, 'போரின் திட்டத்தை மாற்றி அமைக்க வேண்டும்,' என்று வாதாடினர்; காங்கிரஸ் மகாசபையிலும் பிரமாதமாகத் தமது கொள்கையை எடுத்துரைத்தார். அவற்றையெல்லாம் எதிர்த்து நின்றார் ராஜாஜி—வெகு திறமையாக.

பின்னர் ஆண்டு இரண்டு ஆனதும், மகாத்துமா விடுதலை அடைந்தார்; நாட்டின் நிலையை நோக்கி நலிவுற்றார்; 'சட்டசபைக்குச் செல்லுபவர் செல்லுக,' என்றார்; 'மற்றவர்கள் தேசத்தைச் சீராக்கும் ஆக்க வேலையில் ஈடுபட வேண்டும்,' என்று அறிவித்தார். அதனல், கிராமங்களின் ஆக்க வேலையிலே ராஜாஜியின் கவனம் பதியலாயிற்று.

# 12. ஆசிரமச் சேவை

'மகாத்துமா காந்தி கூறிய வண்ணம் தமது சேலம் ஜில்லாவிலே திருச்செங்கோட்டுக்கு அருகி லுள்ள **புதுப்பாளையம்** என்னும் கிராமத்தில் **காந்தி ஆசிரமம்** ஏற்படுத்தினர் ராஜாஜி. புதுப்பாளையம் மிட்டாதாரரான **இரத்தினசபாபதி கவுண்டர்** என்பார், அதற்கு வேண்டிய வசதிகளெல்லாம் தேடிக் கொடுத்தார். ஓலைக் கூரையும் மண் சுவரும் கொண்ட பத்துப் பன்னிரண்டு குடிசைகள் கொண்டதே அந்த ஆசிரமமாகும்.

ராஜாஜி தம் இளையகுமாரர், குமாரத்தியா ருடன் ஒரு குடிசையில் வசித்து வந்தார். அவர் தோழரும் தொண்டரும் மற்றக் குடிசைகளில் வசித்து வந்தனர். அவர்களுள் இருவர் ஹரிஜன சமூகத்தைச் சேர்ந்தவர். எல்லாரும் ஒன்ருக உண்டு, ஒரே குடும்பத்தினரைப் போல வாழ்ந்து வரலாயினர்.

அச்சீமையிலே மணமகளுக்கு வரிசைப் பொரு ளாகக் கைராட்டை கொடுக்கும் வழக்கம் இன்றும் உண்டு. ஆயினும், ஆசிரமம் ஆரம்பித்த சமயத்திலே கைராட்டையால் நூல் நூற்றல் அறவே மறந்து போகும் நிலையில் இருந்தது. அதனை உயிர்ப் பித்தல் ஆக்க வேலைகளுள் ஒன்ருகும். ஆனது பற்றி, ஆசிரமத் தொண்டர் அங்கே வீடுவீடாகச் சென்று, இராட்டைப் பாட்டுப்பாடி, நூற்புத் தொழிலுக்கு உயிரூட்டினர்.

நூல் நூற்பதற்குரிய பஞ்சு கொடுத்து, நூலை விலைக்கு வாங்கியும், அதனை நெசவு செய்து காட்டி

யும், கதர் நெசவைப் பெருக்கி வந்தனர்; அத னல், அங்கே வயிறு காயும் மக்களுக்கு ஓரளவு பிழைப்புக்கும் வழி காட்டினர். ஆசிரமம் ஏற்பட்ட ஐந்து வருஷத்துக்குள் இலட்சம் ரூபாய்க்கு அதிக மான கதர்த்துணி உற்பத்தி ஆயிற்று; தருமவைத் திய சாலையொன்றும் ஏற்பட்டது; ஒரு பள்ளிக் கூடமும் முளைத்தது.

'புதுப்பாளையம் காந்தி ஆசிரமக் கதர்' என் ருல், அதற்கு ஒரு தனி மதிப்பு உண்டாயிற்று. கதர் உற்பத்திக்கு அடுத்தபடியாகத் தீண்டாமை விலக்கில் ஆசிரமத்தார் கவனம் செலுத்தினர். தொடக்கத்திலிருந்து தீண்டாமை விலக்கில் ராஜா ஜிக்குப் பற்று அதிகம் உண்டு. சேரிகளிலுள்ள கிணறுகளை ஆழமாக்குதல், புதிய கேணிகளை வெட்டுவித்தல், கோயில் கட்டிக்கொடுத்தல், ஹரி ஜன மாணவ மாணவிகளுக்கு உபகாரச்சம்பளம் அளித்தல் முதலியன நடைபெற்று வந்தன.

சமபந்தி போஜனத்தையும் ஹரிஜனத் தொண்டையுங் கண்டதும், முன்னம் ஆசிரமத்துக் குக் காயும் கறியும் பாலும் தயிரும் கொடுத்து உதவி வந்தகுடியானவர், அவற்றைக் கொடுப்பதை நிறுத் திக்கொண்டனர். ஆனலும், அக்குடியானவருக்கு வேண்டிய பஞ்சைக்கொடுத்து உதவுவதிலும், நூலை விலைக்கு வாங்குவதிலும், இதர ஊழியம் புரிவதி லும் ஆசிரமத்தார் தவறவில்லை; மேலும் பல உதவி களையும் தட்டாது செய்து வந்தனர்.

நாளடைவிலே அக்குடியானவரின் மனம் மாறியது. வெளியிடங்களிலிருந்து பற்பலர் தலயாத் திரைபோல ஆசிரமத்துக்கு வந்து போவதை அவர் கள் உணர்ந்து, பேருதவி புரிய முற்பட்டார்கள்.

வழக்கறிஞராய்ச் சுகமே வாழ்ந்த ராஜாஜி, பற்பல பட்டிக்காடுகளுக்கும் கட்டை வண்டியிற்போய், மக்களுடன் ஒருவராய்ப் பழகி, நல்லுரை கூறி, அனைவருக்கும் ஏற்ற தோழராய் விளங்கி வரலானார். அப்போது அவருக்கு 'வக்கீல் சாமி' என்னும் பெயர் பிரபலமாயிற்று.

தீண்டாமை விலக்கையொட்டி மது விலக்கு ஊழியத்தையும் ஆசிரமத்தார் மேற்கொண்டனர். படங்களையும், பூதக்கண்ணாடிகளையும் கொண்டு, கிராமந்தோறும் சென்று குடிப்பழக்கத்தின் தீமைகளைத் தொண்டர்கள் எடுத்தோதி வந்தார்கள். அப்போது 'கட்குடியை விட்டாற்றான், கடைத்தேறலாம்,' என்று கூறும் '**விமோசனம்**' என்னும் மாதப் பத்திரிகையை ராஜாஜி நடத்தி வந்தார்; ஆங்கிலத்திலும் அவ்விதப் பத்திரிகை ஒன்றை நடத்தலானார்.

பட்டிக்காடுகளிலே கடிதம் எழுதவும், பத்திரம் வரையவும் எழுத்துக் கூலிக்காரர் உண்டு. காசுகொடுத்தாலன்றி அவர்கள் அவற்றை எழுதித் தரமாட்டார்கள். காசும் அதிகமாகக் கொடுக்க வேண்டும். காந்தி ஆசிரமம் ஏற்பட்ட பின்னர், அங்குள்ள கிராமவாசிகள் ஆசிரமத்துக்கு வந்து, பத்திரம் கடிதம் முதலியவற்றை இலவசமாக எழுதி வாங்கிக்கொண்டு போவார்கள்.

சுற்றுப் புறங்களிலே ஏதேனும் அநீதி நடந்தால், 'வக்கீல் சாமியின் ஆசிரமம் சேர்ந்தால் நியாயம் கிடைக்கும்,' என்னும் நம்பிக்கை பலருக்கும் உண்டாயிற்று. ஒருசமயம் ஆசிரமத்துக்கு அருகேயுள்ள ஒரு கிராமத்தில் கொலையொன்று நடந்தது. சவங்கிடந்த கழனியின் சொந்தக்காரரை

யும் பிறரையும் போலீஸார் வெருட்டி, ஆயிரம் ரூபாய்க்குமேல் பறித்துவிட்டனர்.

கிராமவாசி ஒருவர் ஓடோடியும் வந்து ராஜாஜியிடம் முறையிட்டு அழுதார். உடனே, கைக்கூலி கொடுத்த அனைவரிடமிருந்தும் ராஜாஜி வாக்கு மூலம் வாங்கினர்; பின்பு அக்கிராம முனிசீபை அழைத்து, "நான் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்போகிறேன். உங்கள் நண்பர்களான போலீஸாருக்குத் தெரிவியுங்கள். ஒரு நாள் பொறுத்துப் பார்ப்பேன்," என்று எச்சரிக்கை செய்தார்.

'வக்கீல் சாமி சும்மா விடமாட்டாரே!' என்று போலீஸாருக்குப் பயம் பிடித்துவிட்டது. மறு நாளே பணத்துடன் போலீஸாரும் கிராம முனிசீபும் ஆசிரமம் வந்து சேர்ந்தனர். பல சொல்லிப் பயன் என்ன? யார்யாரிடமிருந்து எவ்வளவு பணம் பறித்தனரோ, அவ்வளவையும் அவரவரிடம் கொடுத்துவிட்டனர் போலீஸார். கிராம ஜனங்கள் அது கண்டு ராஜாஜியை அணுகிக் கும்பிட்டு வீழ்ந்தனர். எல்லாருக்கும் புத்தி சொல்லியனுப்பினர் ராஜாஜி.

கிராம மக்களுக்குள்ளே அடிக்கடி சச்சரவு நேரும். அவற்றையெல்லாம் அவர் நடுவு நிலையில் நின்று நியாயத்துடன் தீர்த்து வைப்பார்; கிராமத்தாரின் சேவையை எண்ணி, இரவெல்லாம் கட்டை வண்டியிற் போவார்; பொழுது புலர்ந்ததும், பிரயாணச் சிரமத்தையும் பாராமல், வழக்கை விசாரித்து, சமரசம் உண்டு பண்ணுவார். 'ஏழைகளுக்குச் சேவை செய்தலே இனிய சேவை,' என்பது அவர் கருத்து.

ஆசிரமத் தொண்டர்களுக்கு அரிய ஆசிரியரைப்போல அவர் விளங்கி நின்று, அனைவரையும் பண்படுத்தினர். இப்போது மத்திய ராஜாங்கத்திலே இரயில் இலாக்காவின் உதவி மந்திரியாராயுள்ள **திரு கே. சந்தானம்,** அந்த ஆசிரமத்தில் வதிந்த பாக்கியம் படைத்தவர். புராதன காலத்திலே ஆலயங்களில் வந்தனை வழிபாடுகள் எவ்விதம் பயபத்தியுடன் நடந்தனவோ, அவ்விதமே ஆசிரமத்திலும் வந்தனை வழிபாடு, பஜனை, சேவை எல்லாம் இனிது நடந்து வந்தன.

புதுப்பாளையம் காந்தி ஆசிரமம் அவ்விதமெல்லாம் ஆக்க வேலை செய்து வந்ததைப் போற்ருதார் யார்?



ராஜாஜியும் காந்தி ஆசிரமப் பெண் தொண்டர்களும்

# 13. சங்கநாதம்

**கா**ங்கிரஸ்காரருள் இரு பிரிவினர் ஏற்பட்டனர்; சட்டசபையில் புகுந்து வேலை செய்யும் சுயராஜ்யக் கட்சியார் ஒரு பிரிவினர்; ஆக்க வேலையிலேயே அக்கறையுள்ளார் மற்றொரு பிரிவினர். ராஜாஜியைப் போன்றவர் காந்தி சங்கம், காந்தி ஆசிரமம் என்பன அமைத்து அவற்றின் மூலம் தேச சேவை செய்து வந்தனர். சுயராஜ்யக் கட்சியாரும் சட்ட சபையிலே தமது சொல்லாலும் செயலாலும் அதிகார வர்க்கத்தை ஆட்டிப் படைக்கத் தவறவில்லை. ஆயினும், ராஜ தந்திரத்திலே இணையாருமில்லாத ஆங்கில மந்திரிகளோ, அசைந்து கொடுப்பது போலப் பாசாங்கு பண்ணி, நமது தேசத்துக்குச் சுதந்தரம் வழங்க மறுத்தே நின்றார்கள். இதற்குள் சித்தரஞ்சன தாஸ் காலமானார். அது சுயராஜ்யக் கட்சியின் வலக்கை முறிந்தது போலாயிற்று. பண்டித மோதிலால் மட்டும் தனியே நின்றார்.

அங்கிலேயில், காங்கிரஸ்காரர் அனைவரையும் திரட்டிப் 'போர் தொடங்கியே தீரவேண்டும்,' என்றார் மோதிலால். ஆக்க வேலையில் மூழ்கிக் கிடந்தவரும் 'ஆம்' என்றனர். 1929-ஆம் வருஷ முடிவிலே இலாகூர் நகரில் காங்கிரஸ் மகா சபை கூடியது. பண்டித ஜவாஹர்லால் நேரு சபைத் தலைமை தாங்கினார். பரிபூரண சுதந்தர இலட்சியத்தை முன்னிட்டு மீண்டும் போர் முரசு முழக்க வேண்டும் என்று தலைவர்கள் முடிவு செய்தார்கள்.

காங்கிரசை விட்டு விலகி நின்ற மகாத்துமா காந்தி, மறுபடியும் முன் வந்தார்; போர் நடத்தச் சர்வாதிகாரப் புருஷரும் ஆனார். அவர் தோழரான ராஜாஜியும் காரியக் கமிட்டியில் சேர்ந்துகொண்டார். போர் தொடங்கு முன், அரசப் பிரதிநிதிக்கு ஓர் இறுதிக் கடிதம் விடுத்தார் காந்தி மகான். அதற்குப் பதில் கிட்டவில்லை. உடனே, 'போரில் குதிப்போம்!' என்று அவர் சங்கநாதஞ்செய்தார்.

போர் முறை புதிய முறையில் அமைந்தது: மக்கள் வாழ்க்கைக்கு உப்பு இன்றியமையாப் பொருள். ஏழைக்கும் பணக்காரனுக்கும் அஃது அவசியம். கடல் நீரைத் தேக்கி வைத்தால், மலை மலையாக உப்புக் கிடைக்கும். உப்பு வர்த்தகம் அரசாங்கத்தின் ஏகபோகமாம். உப்புக்கு வரியும் விதிக்கப்பட்டிருந்தது. இந்த அநீதத்தை மகாத்துமா அறிந்தார்; 'உப்புச் சண்டை தொடங்குவோம்,' என்றார்.

1930-ஆம் வருடம் மார்ச்சு மாதம் உப்புச் சண்டைக்கு அவர் புறப்பட்டார்; அவருடன் எழுபது தொண்டர் கிளம்பினர். கூர்ஜர தேசத்திலுள்ள 'தண்டி' என்னும் உப்பள நகரை நோக்கி எல்லாரும் கால் நடையாகவே சென்றனர்; சென்றவரை வழி நெடுக மக்கள் வரவேற்று ஆனந்த ஆரவாரம் செய்தார்கள். 'ஒரு கை உப்பையள்ளி, உலகைக் கலக்கப் பார்க்கிறார் காந்தி!' என்று அகில தேசங்களிலிருந்தும் பத்திரிகைப் பிரதிநிதிகள் வந்திருந்தனர் அக்காட்சியைக் காண.

"தண்டி நகரிலே உப்பளத்தை முற்றுகை இடுவேன்! அங்கிருந்து உப்பு அள்ளுவேன்! அதன் பலனாகச் சுயராஜ்யம் எய்த முயலுவேன்!

சுயராஜ்யம் எய்தினல், திரும்பி வருவேன் சபர்மதி ஆசிரமத்துக்கு! அன்றேல், எனது உடலம் கடலிலே மிதக்கும்! தேசமெங்கும் உப்புச் சண்டை நடக்க வேண்டும்!" என்னும் பொருள் படுமாறு புகன்று, போரில் இறங்கினர் அப்பெருமான்.

தண்டி நகர் சேர்ந்தார் அவர்; உப்பை அள்ளினர்; உடனே சிறைப்பட்டார். அவரைத்தொடர்ந்து தொண்டர் பலரும் உப்பை அள்ளினர். அவர்களை அடித்தும் உதைத்தும் அதிகாரிகள் வதைத்தார்கள். அவர்கள் ஒன்றுக்கும் அஞ்சவில்லை; கருமத்திலேயே கண்ணுயிருந்தார்கள். உப்புச் சண்டை எங்கும் மூண்டது; பெரிதும் வலுத்தது.

என்றலும், நம்மவருட்சிலரோ, "ஈதென்ன சண்டை! உப்பையள்ளிச் சுயராஜ்யப் போர் புரிவதாவது! எல்லாம் கேலிக் கூத்துதான்!" என்று எண்ணி ஏசினர். 'காந்தி மகான் உப்பையள்ளினர்; சிறையானர்,' என்ற செய்தி வடக்கே இமயம் முதல் தெற்கே குமரி வரையில் எட்டியது. எட்டவே, ஆங்காங்கிருந்த தலைவர்களும் தொண்டர்களும் அப்போரிலே பாய்ந்தார்கள்; எங்கும் உப்பைக் காய்ச்சினர்கள்.

பொது மக்கள் அதற்கு ஆதரவு தருவதைக் கண்டதும் அதிகாரிகளுக்கு மனம்பொறுக்கவில்லை; ஆதலின், 'உப்புச் சண்டையில் ஈடுபடுபவருக்கு யாரும் எந்த உதவியும் செய்யக் கூடாது!' என்று உத்தரவு பிறப்பித்தார்கள்; 'உதவி புரிந்தால், அபராதமும் சிறையும் கிட்டும்,' என்று பறை சாற்றினர்கள்; தொண்டர்களையும் தலைவர்களையும் வைதும் அடித்தும் தடுத்துப் பார்த்தார்கள்.

சண்ட மாருதம்போல எங்கும் பொங்கி வீசும் உப்புச் சண்டையைக் கண்டு உலகமே மலைத்தது! காந்தியின் புதிய போர் முறை கண்டு வியந்தது! அதிகாரிகளின் அட்டகாசம் கண்டு அருவருப்பும் எய்தியது! சென்னை மா நகரிலும் அச்சண்டை சீறி எழுந்தது. **திரு. பிரகாசத்தின்** தலைமையில் சென்னை வாசிகள் திருவல்லிக்கேணிக் கடற்கரையில் திரண்டு, உப்புச் சண்டையை உற்று நோக்கினர்.

தமிழகத்திலே அச்சண்டையை மூட்டிய மூர்த்தி ராஜாஜியே. தஞ்சையிலுள்ள **வேதாரணியம்** எனும் தலத்தையே அவர் சமரபூமியாகக் கொண்டார். அதன் விருத்தாந்தத்தை அடுத்த அதிகாரத்தில் ஆராய்வோம்.

# 14. வேதாரணியம்

ஆண்டுதோறும் நடைபெறும் தமிழ் மாகாண அரசியல் மகாநாடு அந்த வருஷம் வேலூரிலே கூடியது. 'தமிழகத்தே உப்புச் சண்டை நடக்க வேண்டும்; அதற்கு ராஜாஜியே தளபதியாக வேண்டும்,' என்று அம்மகாநாட்டிலே தீர்மானம் பிறந்தது.

வேதாரணியம் விழுமிய தலம். 'திருமறைக் காடு' என்றும் அதனை வழங்குவர். தேவாரம் ஓதிய வுடனே, அங்குள்ள ஆலயத்தின் கதவு தானே திறவுண்டது என்று தமிழ் நூல்கள் கூறும். அந்த இடம் கடற்கரையை அடுத்தது. அங்கே உப்புக் காய்ச்சும் தொழில் நடந்து வருகிறது. உப்பளங்கள் அங்கே மிக அதிகம். அத்தகைய இடத்தில் போர் தொடங்க எண்ணினர் ராஜாஜி.

திருச்சியிலே ராஜாஜியும் தொண்டர்களும் கூடினார்கள்; கால் நடையாகவே வேதாரணியம் போவதென முடிவு செய்தார்கள். அவ்வாறே 1930-ஆம் வருடம், ஏப்பிரல் மாதம், 13-ஆந் தேதி அந்த யாத்திரை தொடங்கியது. தலைவரையும் தொண்ட ரையும் ஆசி கூறி வழியனுப்பினார்கள் பொது மக்கள். தேசீயப் பாசுரங்களைப் பாடிக்கொண்டும், தெய்வத்தை ஏத்திக்கொண்டும் எல்லாரும் பயண மாயினர்.

வழி நெடுகத் தேசீயப் பாட்டு, தேசீயப் பிரசங் கம், அன்பு மிக்க வரவேற்பு, ஆர்வம் நிறைந்த உப சாரம்—தேர்த் திருநாள் போலவே அதனை அனை வரும் மதித்தனர். அச் சுயராஜ்ய யாத்திரையைச்

சுதந்தரச் சிங்க நாதத்தைக் கேள்வியுற்றதும், தஞ்சை ஜில்லாக் கலெக்டர் **தரான்** என்பார் கச்சை கட்டினர்; 'அத்தொண்டருக்கு உணவோ, இடமோ, வேறு ஆதரவோ அளிக்கக் கூடாது,' என்று கட்டளையிட்டார்; 'மீறி நடந்தால், ஆயிரம் ரூபாய் அபராதம்! ஆறு மாதம் சிறை வாசம்!' என்றார்.

அந்த உத்தரவுகளை இலட்சக் கணக்கில் அச்சிட்டுக் கிராமந்தோறும் குட்டியதிகாரிகள் வழங்கினர்கள். கிராமத்தாருட்பலர் அந்த உத்தரவைச் சட்டை செய்யவில்லை; சத்தியப் போர் வீரருக்கு வேண்டிய உணவு, இருக்கை முதலிய வசதிகளை வலுவில் தேடிக் கொடுத்தார்கள். எந்தக் கிராமத்திலும், ராஜாஜிக்கும் அவர் தொண்டருக்கும் ராஜோபசாரமே நடந்தது.

ஆனல், '**கல்லணை**' என்னும் ஊரிலே ஓர் அதிசயம் நடந்தது: காங்கிரஸ்காரரின் வருகையைக் கேட்டதும், அந்த ஊர் வாசிகளுட்பலர் கதவைப் பூட்டிக்கொண்டு வெளியே போய்விட்டனர். வெளியே போகாமலிருந்த இரண்டுமூன்றுபேரோ, மறைந்துகொண்டனர். 'செங்கோலுக்கு முன்னே சங்கீதமா?' என்னும் பேர்வழிகள் இல்லாமற் போகவில்லை.

திருச்சிக்கு அடுத்த சீரங்கத்திலிருந்த **கோடியாலம் அரங்கசாமி** ஐயங்கார் என்பார், அந்நிலையை அறிந்தார்; உடனே தமது மோட்டார் காரில் கல்லணைக்கு விரைந்து வந்தார்; பூட்டப்பட்டுக் கிடந்த தம் உறவினரின் வீடுகளைத் திறக்கச் செய்தார்; தலைவரையும் தொண்டர்களையும் அவ்வீடுகளில் இருத்தி, வேண்டிய உதவிகளையெல்லாம் தேடிக் கொடுத்தார்.

என்ன இருந்தாலும், கலெக்டரின் ஆணை அல்லவா? ஒன்றுமறியாத கிராமவாசிகள் சற்றே அஞ்சக் கூடும். ஆதலின், முன்னணியிலே சென்ற **திருவண்ணமலை அண்ணமலைப் பிள்ளை, திருமதி உருக்கு மிணி இலட்சுமிபதி** என்னும் இருவரும் கிராமந் தோறும் கூட்டம் போட்டு, 'அச்சமில்லை! அஞ்ச வேண்டா!' என்று ஆவேசமாகப் பேசி, மக்களுக்கு உற்சாகமும் தைரியமும் ஊட்டலாயினர்.

பதினைந்து நாள் கால் நடையாகச் சென்ற பிறகு, 28-ஆந் தேதி எல்லாரும் வேதாரணியம் போய்ச்சேர்ந்தனர். மறுதினம் அனைவரும்உண்ணு நோன்பிருந்து, ஆண்டவனைத் தொழுது, போரில் வெற்றி கிட்டும் வண்ணம் வேண்டி நின்றனர். இதற்கிடையில் அந்த இடத்துக்குப் போலீஸார் ஏராளமாய் வந்திருந்தனர்.

'யாது விளையுமோ! என்ன நேருமோ!' என்பதே அதிகாரிகளின் கவலையாயிற்று. 'சத்தியப் போர் வீரர், என்ன துன்பம் நேர்ந்தாலும் சாந்த முடனிருக்கும் காந்தி வீரர், வானத்தை இடித்துக் கீழே தள்ளிவிடுவரா என்ன?' எனத் தருக்குற்றிருந்த தனது ஆணை செல்லாமற்போனது கண்டு தரான் துரை கோபங்கொண்டு, ஜனங்களைத் துன்புறுத்தி நின்முன். என்றாலும், மக்களின் மனவளம் குன்றவில்லை.

முப்பதாந்தேதி பதினுன்கு தொண்டர்களுடன் ராஜாஜி சென்று, கடலருகே உப்பை அள்ளினர். உடனே போலீஸார் அவரைக் கைது செய்தனர்; வழக்கும் தொடுத்தனர். மன்னார்குடி மாஜிஸ்திரேட்டு விசாரணை நடத்தினர். காந்தியின் கொள்கைக்கு இணங்க ராஜாஜி எதிர் வழக்கு ஆடவில்லை;

இட்ட தண்டனையை இனிய முகத்துடன் ஏற்றுக் கொள்வதே காந்தியின் கோட்பாடாகும்.

ராஜாஜியின்மீது இரண்டு குற்றம் சுமத்தினர்; ஒன்றினுக்கு இருநூறு ரூபாய் அபராதம், அல்லது மூன்று மாதம் சிறை வாசம்; மற்றொன்றினுக்கோ, ஆறு மாதம் காவல் தண்டனை; ஆக ஒன்பது மாதச் சிறை வாசம் அவருக்குக் கிட்டியது. சிரித்த முகத்துடன் அவர் சிறை புகுந்தார். பின்பு அப் போராட்டமோ, மிக மும்முரமாய் நடக்கலாயிற்று.

அப்போது புளியங்குச்சியும் கைப்பிரம்புங் கொண்டு தொண்டர்களை அடித்தனர் போலீஸார்; வேடிக்கை பார்க்க வந்த ஜனங்களையும் அடித்துத் துரத்தினர். ஆனாலும், அங்கே சட்ட மறுப்புப் போர் தணியவில்லை. ராஜாஜி சிறை புகுந்ததைக் கேட்டதும் தமிழகத்திலே பல இடங்களில் கடை அடைப்பு நிகழ்ந்தது; வேலை நிறுத்தம் ஏற்பட்டது; போலீஸாரின் அடிதடியைக் கண்டித்துப் பல இடங் களிலே பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன.

அப்போதுதான் அரசியற்கைதிகளின் படிப் பையும் செல்வத்தையும் மதித்து, ஏ, பி, சி என்று மூன்று தரமாக அதிகாரிகள் கைதிகளைப் பிரித் தார்கள். 'ஏ' வகுப்புக் கைதிகளுக்கு எல்லாச் சௌகரியங்களும் கிடைக்கும்; வீட்டில் இருப்பது போலவே அவர்கள் சிறையில் வாழ்ந்து வரலாம். 'பி' வகுப்புக் கைதிகளுக்கு அதிற்கொஞ்சம் குறை வான சௌகரியங்கள் உண்டு. 'சி' வகுப்புக் கைதி களுக்கோ, சிறையுணவும் உடையுமே கிட்டும்; வேறெவ்விதச் சலுகையும் கிடையாது.

ராஜாஜியை 'ஏ' வகுப்புக் கைதி என்று திட்ட மிட்டார் நீதிபதி. தமக்குத் தனிப்பட்ட சலுகை

எதுவும் வேண்டாவென்று சொன்னர் ராஜாஜி. தாம் தமது கடமையை ஆற்றுவதாக அங்கீதிபதி உரைத்து, அவரை 'ஏ' வகுப்பிலேயே வைத்தார். தண்டனை கொடுத்ததும், முதலிலே ஒரு வாரம் திருச்சிச் சிறையிலேயே அவரை வைத்திருந்தனர்; பின்னர்ச் சென்னைச் சிறைக்கு மாற்றினர்.

தமிழகத்திலே முதன்முதல் ராஜாஜி தொடங்கிய உப்பு உரிமைப் போர் எங்கும் பரவியது. பெருங்காற்றினைப்போல, சீமான்களும் சிறுவர்களும் அறிஞரும் பாமரரும் ஆயிரக் கணக்கிலே அப்போரில் சேர்ந்து சிறைச்சாலை புகுந்தனர்.

கெடுத் தீர்ந்ததும், ராஜாஜி விடுதலையடைந்தார். அப்போரிலே சத்திய மூர்த்தி பங்குகொள்ளவில்லை. இதற்கு உடல் நலிவே காரணம். ஆயினும், 'சத்திய மூர்த்தி சிறை புகவில்லையே!' என்று மக்கள் பிணங்கி நின்றார்கள். ராஜாஜி அதனையறிந்ததும் சத்திய மூர்த்தியைப் பார்த்துப் பேசினர்.

"உடல் நலிவு காரணமாக நீங்கள் சிறை புக முடியவில்லை என்பது மெய்யே. ஆயினும், இக் கட்டான இச்சமயத்திலே நீங்கள் காங்கிரசைக் கைவிடலாமா? நீங்கள் சிறை புகுந்தால், காங்கிரசுக்கும் சிறப்புண்டு," என்று உள்ளன்புடன் உருக்கமாக உரைத்தார். உடனே சத்திய மூர்த்தியும் சிறை புகுந்து சிறப்பெய்தினர்.

# 15. காங்கிரஸ் செல்வாக்கு

தேசமெங்கும் உப்புச் சண்டை பிரமாதமாய் நடந்தது. உலகனைத்தும் அதனைக் கூர்ந்து கவனித்து வந்தது. அதன்மேல், இந்தியாவுக்குச் சுதந்தரமளிக்க மறுப்பதாக ஆங்கில மந்திரிகளை அனைவரும் தூற்றினர். அது கண்டு, காங்கிரசுடன் உடன்பாடு கொள்ள அம்மந்திரிகள் நினைத்தார்கள்.

அப்போது இங்கே ராஜப் பிரதிநிதியாய் இருந்த **லார்டு இர்வின்** என்பார், மகாத்துமா காந்தியை விடுதலை செய்து, அவருடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார். அது '**காந்தி-இர்வின் ஒப்பந்தம்**' எனப்படும். அதன்படி, காங்கிரஸ்காரர் அனைவரும் சிறையிலிருந்து விடுதலையடைந்தனர். 'ஏழை மக்கள் இலவசமாக உப்புக் காய்ச்சிக்கொள்ளலாம்,' என்னும் சலுகை ஏற்பட்டது.

உப்புச் சண்டையில் வெற்றி பெற்ற மகாத்துமா காந்தி, ஆங்கில மந்திரிகளின் அழைப்பை மதித்து, இலண்டனுக்குச் சென்றார். ஆங்கில மந்திரிகளுக்கும் காந்திக்கும் இடையே அரசியல் சமரஸப் பேச்சுக்கள் நடைபெற்றன. காந்தி விரும்பிய வண்ணம் அரசியலை அமைக்க அவர்கள் ஒப்பவில்லை. அவர்கள் கூறிய அரசியல் அமைப்பை மகாத்துமாவும் ஏற்கவில்லை.

'மீண்டும் போர்தான்!' என்று கூறி இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்குத் திரும்பினர் காந்தி மகான். இதற்குள் **காந்தி-இர்வின்** ஒப்பந்தத்தை மீறி அதிகாரிகள் நடந்து வந்தார்கள். காந்திக்கு அடுத்த படியில் இருந்த தலைவர்களையும் சிறை செய்துவிட்டார்கள். விதியின்றி மறுபடியும் போர் முரசு கொட்டினர் காந்தியடிகள்.

அப்போர் மிக உக்கிரமாய் நடந்தது. ஆடு மாடுகளை அடிப்பதுபோல அடித்தும், ஜனங்களின் சொத்துக்களைப் பறிமுதல் செய்தும், ஆயிரக் கணக்கில் அவர்களுக்கு அபராதம் விதித்தும், காங்கிரஸ்காரரின் மனவலியை முறிக்க அரசாங்கம் முற்பட்டுவிட்டது. 'ஈதென்ன **தடியடி ராஜ்யம்!'** என்று நோவாதார் இல்லை. தனது மிருக பலம் அனைத்தையும் அரசாங்கம் ஒரே மூச்சில் கையாண்டு பார்த்தது.

**அவசரச் சட்டம், ஆள்தூக்கிச் சட்டம்** என்ற அநீதியான சட்டங்களைச் செய்து, தேசத்தையே ஒடுக்கிவிட அதிகாரிகள் முயன்றார்கள்; தலைவர்களை எல்லாம் பிடித்துச் சிறையில் இட்டார்கள்; தொண்டர்களையும் பதினாயிரக் கணக்கில் கைதி செய்தார்கள். ஜனங்களின் உள்ளம் ஒடியவில்லை; ஒடுங்கவில்லை; ஆனால், உடல் மட்டும் சோர்ந்து விட்டது.

அரசாங்கமும் தடியடி ராஜ்யம் நடத்தி அலுத்துப் போய்விட்டது. அதற்கு மேலே என்ன செய்வதெனத் தோன்றவில்லை. அவ்விதம் இரு திறத்தாரும் சோர்ந்து கிடக்கையில், **டில்லிச் சட்ட சபைக்**குரிய தேர்தல் வந்தது. 'தேசம் சோர்ந்து கிடந்தாலும், காங்கிரஸைச் சார்ந்தே நிற்கும்,' என்று தலைவர்கள் சொன்னார்கள்.

அதனை மெய்ப்பிக்க வேண்டுமே! தேர்தலுக்குக் காங்கிரஸ்காரர் நின்றனர்; எங்கும் தாமே வெற்றி பெற்றனர். அது கண்டு அதிகார வர்க்கம் விழித்தது; தனது வீறுப்பைத் தளர்த்திக்கொண்டது. கொஞ்சம் கொஞ்சமாக டில்லிச் சட்ட சபையிலே காங்கிரஸ்காரர் கொடுக்கும் சொற்சூட்டை அதிகாரிகள் தாங்க முடியவில்லை.

ஆங்கில மந்திரிகள் அதனை அறிந்தார்கள்; உடனே இந்தியாவின் அரசியலை ஒருவாறு திருத்தி அமைத்தார்கள். மாகாணங்களுக்கெல்லாம் ஓரளவு சுய ஆட்சி கிட்டியிருந்தது. அந்நிலையில் மாகாணச் சட்ட சபைகளுக்கெல்லாம் தேர்தல்கள் நடந்தன. ஒன்பது மாகாணங்களில் காங்கிரஸ்காரரே பெருவாரியாக வெற்றி பெற்றனர்.

'மாகாணமெங்கும் மந்திரி சபைகள் அமைக்க வேண்டும். பெருவாரியாக வந்திருக்கும் காங்கிரஸ்காரரே அதனை அமைக்க வேண்டும்,' என்பது நியதி. மாகாணக் கவர்னர்கள் விரும்பியபோதெல்லாம் மந்திரிகளின் நிருவாகத்தில் குறுக்கிடலாம். இந்த நிலைமையில் மந்திரி சபைகளை அமைக்கக் காங்கிரஸ்காரர் முன் வரவில்லை.

காங்கிரஸ்காரரல்லாத சட்ட சபை உறுப்பினரோ, ஒரு சிலரே. இவர்களைக்கொண்டு மந்திரி சபைகளை அமைக்க முடியாது. அமைத்தாலும், ஒரு நாழிகைக்குமேல் அச்சபைகள் நிலைக்க மாட்டா. பெரும்பான்மையான உறுப்பினர்கள் அச்சபைகளின்மீது நம்பிக்கை இல்லை என்றால், அச்சபை கலைந்து போக வேண்டும். இதுவே சட்டமாகும்.

இத்தகைய நிலையில், ஆங்கில மந்திரிகள் கவலை கொண்டார்கள்; காங்கிரசுக்கு இணங்கி நடக்கும் வண்ணம் கவர்னர்களுக்கு ஆணையிட்டார்கள். கவர்னர்களும் 'தலையிடுவதில்லை,' என்று வாக்களித்தார்கள். அதன்மேல், மாகாணந்தோறும் மந்திரி சபைகளை அமைக்கக் காங்கிரஸ் முன் வந்தது.

ஒன்பது மாகாணங்களிலே **காங்கிரஸ் மந்திரி சபைகள்** ஏற்பட்டன. அநேகமாக எல்லாக் கவர்னர்

களும் காங்கிரஸ் மந்திரிகளுடன் ஒத்துப் போனர்கள். இரண்டொரு கவர்னர்கள் மட்டும் முரண்பட்டு நின்ருர்கள். அது கண்டதும், பதவிகளை வீசி எறிந்து வெளியே வரத் தயார் என்றனர் மந்திரிமார்.

பின்னர்க் கவர்னர்களும், அவர்களது விசேஷ அதிகாரம் என்னும் வேதாளமும் கட்டுக்கடங்கி நிற்க, ஏறக்குறைய இரண்டரை வருஷ காலம் காங்கிரஸ் மந்திரிகளின் ஆட்சி கண்ணியமாகவே நடந்து வந்தது. அது கண்டு கவர்னர்களும் ஆச்சரியம் அடைந்தார்கள்; நம்மவரின் நிருவாகத் திறமையைக் கண்டு மனம் பூரித்தார்கள்.

சென்னை மாகாணத்திலே அமைந்தவை இரண்டு சட்ட சபைகள்: ஒன்று, 'ஜனப்பிரதிநிதி சபை' எனப்படும்; மற்ருென்று, 'மேற்சபை' எனப்படும். ஜனப் பிரதிநிதி சபையில் மொத்த அங்கத்தினர் 215 பேர்; இவர்களுள் 159 பேர் காங்கிரஸ்காரர். மேற்சபையிலும் காங்கிரஸ்காரரே அதிகம்.

சத்திய மூர்த்திக்குப்பதிலாகப் பட்டதாரிகளின் பிரதிநிதியாகத் தேர்தலுக்கு நின்ருர் ராஜாஜி. அவரை எதிர்த்துத் திரு. நாராயண குருப்பு, திரு. எஸ். ராஜகோபாலன் ஆகிய இருவரும் நின்றனர். அத்தொகுதியின் வாக்காளர் தொகை ஆருயிரம். அவர்களுள் குருப்புக்கு 372 பேரும் ராஜகோபாலனுக்கு 270 பேருமே வாக்களித்தனர். மற்றவர் ராஜாஜிக்கே வாக்களித்தனர்.

பெருவாரியாயிருந்த காங்கிரஸ்காரரின் தலைவரான ராஜாஜியைச் சென்னைக் கவர்னர் அழைத்து மந்திரி சபை அமைக்க வேண்டினர். அவரும் அவ்வாறே அமைத்தார்; முதன்மந்திரியாருமானர்.

# 16. முதன் மந்திரியார்

'மூன்றே முக்கால் நாழிகை முத்து மழை பொழிந்தது,' என்பார்கள். அதற்கிணங்க, இரண்டே கால் வருஷம் ராஜாஜி நமது மாகாணத்தின் முதன் மந்திரியாராய் இருந்து, அரசியலைச் சிறப்புற நடத்தி வந்தார்.

சென்னைச் சட்டசபையிலே அன்று காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர் 159 பேர். அவர்களுள் **தமிழர், தெலுங்கர், கன்னடியர், மலையாளிகள்** என நான்கு வகையினர் உண்டு. அவர் அனைவரும் சேர்ந்து, ஒரு மனமாக ராஜாஜியையே தலைவராகக் கொண்டனர். எனவே, எல்லாருக்கும் அவரிடம் நம்பிக்கை உண்டென்பது வெளியாயிற்று.

தலை உள்ளவரெல்லாம் தலைவராகிவிட முடியாது. தலைவராவதற்கு அறிவு, ஆற்றல், அரசியல் திறமை, ராஜதந்திரம் முதலிய அருந்தகுதிகள் அவசியம். எல்லாம் ஒருங்கே வாய்க்கப் பெற்றிருந்தார் ராஜாஜி. மந்திரி சபையை அமைத்த போது, பற்பல பிரிவாரும் ஒப்பும் வண்ணம் பத்து மந்திரிகளைத் தேர்ந்துகொண்டார்; அப்பதின்மருக்கும் ஒவ்வொரு காரியதரிசியாரை அமர்த்தினர்.

> 'இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
> அதனை அவன்கண் விடல்.'

என்னும் திருக்குறளுக்கு ஏற்ப, அப்பதின்மருக்கும் ஏற்ற இலாக்காக்களின் நிருவாகத்தை ஒப்படைத்தார். ஆனாலும், ஒவ்வோர் இலாக்காவும் சரிவர நடந்து வருகிறதா என்று கண் குத்திப் பாம்புபோல எல்லாவற்றையும் கவனித்துவர அவர் தவறவில்லை.

மந்திரி பதவியை அலங்கார பீடமாகவோ, சுகபோகத்திற்குரிய இடமாகவோ அவர் கருத

வில்லை. "'வெளியே வந்துவிடுக,' என்று எந்த நிமிஷத்தில் காங்கிரஸ் கட்டளையிடுகிறதோ, அந்த நிமிஷத்தில் வெளியே வந்துவிடுவோம்," என்று அவர் உலகறிய உறுதி கூறினர். 'இப்பவோ, பின்னையோ வெளியே போய்விடுவோம்,' என்ற எண்ணத்துடன் இருந்தால், நிருவாகத்தை நன்கு நடத்த முடியுமா?

'நூறு வருஷம் பதவியில் இருப்போம் என்ற உறுதி மனப்பான்மையுடன் நிருவாகத்தை நடத்தி வருவோம்,' என்று கூறவும் அவர் தயங்கவில்லை. நிருவாகத்திற்கு அவர் புதியவரே; அன்றளவும் அரசாங்கத்தை எதிர்த்து எதிர்த்துப் போராடிய பான்மையே மிகுந்தவர். ஆனாலும், 'அறிவுடையார் எல்லாமுடையார்,' என்னும் குறட்பாவினுக்கு அவர் இலக்கானவர். 'அறிவுடையார் ஆவது அறிவார்,' என்பது அவரிடம் புலனாயிற்று.

பலவாறான நோக்கும் போக்கும், மாறுபட்ட மனப்பான்மையும் வாய்ந்த மக்களைக் கொண்டது காங்கிரஸ் கட்சி; மாகாணமும் அத்தன்மையதே. ஆதலின், அன்னார் அனைவருக்கும் நல்லறிவுகளைப் புகட்டுவதே போல, அவர் கூறிய வாசகம் குறிப்பிடத்தக்கது.

'வண்டியைப் பிடிப்பதற்காக—அரசியல் அதிகார வண்டியைப் பிடிப்பதற்காக—இது வரையில் நாம் ஓட்டமாய் ஓடினேம்; வண்டியையும் பிடித்து விட்டோம்; வண்டியிலும் அமர்ந்திருக்கிறோம். எல்லாரும் அவரவர்க்குரிய இடத்தில் ஜாக்கிரதையாய் இருக்க வேண்டும். இருக்கும் இடத்தில் அசையாமலும், ஆடாமலும், கீழே விழாமலும் அமர்ந்திருக்க அறிந்துகொள்ள வேண்டும்,' என்று, அனுபவத்தின் உதித்த அழகான உவமானத்தைக் கொண்டு விளக்கினர்.

ஆங்கிலேயரின் ஆட்சிக் காலத்திலே மந்திரிகளுக்கு 'உவமான உற்பத்திச்சாலை' என்று பெயர் பெற்றுவிட்டார் ராஜாஜி. மாதா மதம் நாலாயிரம் ஐயாயிரம் சம்பளம்! ராஜாஜியோ, தமக்கும் தம் சகாக்களுக்கும் **மாதம் ஐந்நூறு** ரூபாயே சம்பளம் என்று திட்டம் செய்தார். இதுவே காங்கிரஸ் மகாசபை குறித்த தொகையாம். சர்க்கார் உத்தியோகஸ்தருக்கும் தரத்துக்கு ஏற்றவாறு சம்பளத்தை ஒழுங்கு செய்தார்.

1857-ஆம் வருஷம் நடந்த முதல் சுதந்தரப் பெரும்போர்க் காலத்திலே **கர்னல் நீல்** என்பான் நம்மவரை வேட்டையாடினன்; வழி நெடுக மரங்களிலே நம்மவரைத் தூக்கிலிட்டான். அந்த நீலனுக்கு ஆங்கிலேயர் ஒரு சிலையமைத்து, அதனை நகரிலே **மௌண்ட் ரோடிலே** நடு நாயகமான இடத்தில் நாட்டியிருந்தனர். அச்சிலையை அப்புறப் படுத்த வேண்டும் என்று கிளர்ச்சி செய்து, முன்னம் நம் இளைஞருட்பலர் சிறை புகுந்தனர். தேச பக்தரின் கண்ணில் அது உறுத்திக்கொண்டிருந்தது.

தாம் முதல் மந்திரியாரானதும் ராஜாஜி ஒரு நாள் இரவோடு இரவாக அதனை அப்புறப்படுத்தினர்; கண் காட்சிச் சாலையிற் கொண்டு போய் வைத்துவிட்டார். 'இப்படிச் செய்யலாமா?' என்று லண்டனிலே பார்லிமெண்டு சபையில் சிலர் கூக்குரல் இட்டனர். ஏற்ற இடத்தில் சிலை இருப்பதாக அங்கே இந்தியா மந்திரியார் பதிலளித்து, அவர்கள் வாயை அடக்கிவிட்டார்.

இங்கே ராஜாஜி நிருவாகத்தை நடத்தி வரும் நேர்மை கண்டு, பிற மாகாணங்களும் நமது மாகாணத்தைப் பின் பற்றின. நிருவாகத்திலே நெடு நாளாகப் பண்பட்ட ஐரோப்பிய உத்தியோகஸ்

தர் அனைவரும் ராஜாஜியின் நிருவாக நேர்மை கண்டு மலைத்தனர்; மகிழ்ந்தனர்; 'பிறவியிலேயே பெரிய நிருவாகி!' என்று அவரைப் புகழ்ந்தனர்.

மாகாண வரவு செலவு இலாக்கா ராஜாஜி வசம் இருந்தது. வரவு செலவுத் திட்டத்தை அவர் சட்டசபை முன்னே சமர்ப்பித்தார். அதன் நேர்மையும் பண்பும் கண்டதும் அனைவரும் வியந்தனர். எதிர்க்கட்சிகளின் பிடிவாதமும் விதண்டா வாதமும் அவரது ஆணித்தரமான வாதத்தின் முன்னே தலை சாய்ந்து போயின.

அவர் இயற்றிய சட்டங்களில் **மது விலக்குச்** சட்டத்தை முதன்மையாகக் கூறலாம். ஜனங்களைக் குடிக்க வைத்து, அதற்கு ஆக்கமும் அளித்து, ஆண்டுதோறும் கோடிக்கணக்கில் ஆங்கில அரசாங்கம் வருமானம் பெற்று வந்தது. 'பாவக்காசு எதற்கு?' என்று அவர் கூறி, மது பானத்தை ஒழிக்க ஒரு சட்டம் செய்தார்.

முதன்முதல் சேலம் ஜில்லாவிலே கள்ளுக் கடைகளெல்லாம் மூடப்பட்டன; கஞ்சா, அபின் கடைகளும் மூடுண்டன. அதன் பலனையறிந்த ஆங்கில அதிகாரியோ, "மது விலக்கு ஏழை மக்களுக்கு ஒரு வரப்பிரசாதம்," என்றார். வெகு விரைவில் ஏழைமக்கள் அத்தீய பழக்கத்தைக் கைவிட்டுச் சுக வாழ்வு கொள்வார்கள் என்றும் கூறினர்.

காங்கிரசின் ஆக்கவேலைகளிலே கட்குடியை ஒழித்தல் ஒன்றும். அதனை முதன்முதல் நடைமுறையில் சட்டமூலம் சாதிக்க முன்வந்தவர் ராஜாஜியே. இன்று நமது மாகாணம் முழுவதும் மது விலக்கு அமலில் இருக்கிறது. வேறு எந்த மாகாணமும் அவ்வித அரிய சாதனையைச் செய்யவில்லை. கள்ளரக்கனை ஒழிக்கக் கங்கணம் பூண்ட பெருமைக்கு ராஜாஜியே உரியவர்.

மது விலக்கை அமல் நடத்துவதால், சர்க்காரின் வருமானம் குறைந்தது. இதற்கு ஈடு செய்ய வேண்டுமே! அதற்காக **விற்பனை வரிச்** சட்டம் செய்தார் ராஜாஜி. எந்தச் சரக்கை விற்றாலும், வாங்கினாலும் ரூபாய்க்கு ஒரு தம்படி வரி கொடுக்க வேண்டும். பார்ப்பதற்கு இது மிகவும் இலகுவான வரி. ஆனால், ஏராளமான வரும்படிக்கு இடமானதாகும். இவ்வரியைக் கண்டறிந்து விதித்த மூளையே மூளை! பிறமாகாணப்பிரதமர்களும் ராஜாஜியிடமிருந்து பாடங்கற்றனர்.

அவ்வரி விஷயம் சட்ட சபையில் ஆலோசனைக்கு வந்தது. அப்போது, "இந்த வருஷம் துண்டு விழும் தொகை கொஞ்சந்தானே? இவ்வளவு பெரிய வரி ஏன் விதிக்க வேண்டும்?" என்று ஒருவர் வினவினர். அதற்கு ராஜாஜி சொன்ன பதில் இது:

"தாகத்தைத் தீர்த்துக்கொள்வதற்கு நமக்கு ஒரு கோப்பைத் தண்ணீர்தான் தேவை என்றாலும், அதற்காகக் கிணற்றிலே கோப்பையை விட்டா ஜலம் எடுக்கிறோம்? குடத்தையோ வாளியையோ கிணற்றில் விட்டே நீர் எடுக்கிறோம் அல்லவா?"

இவ்விதம் உவமை காட்டிப் பதிலளித்தவுடனே சபையார் திடுகிட்டனர். தட்டிப் பேச முடியவில்லை. **பொருள் நூல்** மேதைகளெல்லாம் அவ் விற்பனை வரிச்சட்டம் கண்டதும், ராஜாஜியின் நுண்ணறிவை வியந்தனர்; முன் யோசனையை மெச்சினர். மது விலக்கினுக்கு அடுத்தபடி, தீண்டாமை விலக்கு அவரது பெருஞ்சாதனைகளுள் ஒன்றும்.

'பல தீட்டுக்கு ஒரு முழுக்கு,' என்னும் பழமொழி ஒன்று உண்டு. தீண்டாதார் என்பாரை 'அங்கே செல்லக்கூடாது; இங்கே வரக்கூடாது,'



ஹரிஜன சேவை ; பிரதம மந்திரியாராய் இருந்த போது ராஜாஜி ஒரு கிணற்றை ஹரிஜனங்களுக்குத் திறந்து வைத்தார்.

என்றெல்லாம் பலர் சொல்லுவதை ஒரேயடியில் போக்கிவிட நினைத்தார் ராஜாஜி ; ஆலயங்களிலே தீண்டாதாரைப் புகும்படி செய்துவிடுதல் நலமென்று கருதினர் ; மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலே தீண்டாதாரை அழைத்துக்கொண்டு சென்ரூர் மதுரை வழக்கறிஞர் திரு. வைத்திய நாத ஐயர்.

"அது சரியே. அதனை எதிர்த்தல் சரி அன்று," என்று ராஜாஜி சட்டமொன்று செய்தார். அதற்கு எவ்வளவோ எதிர்ப்பு ஏற்பட்டது ; வழக்குகளும் கிளம்பின. ஆயினும், அச்சட்டத்தின் முன்னே எல்லாம் படுத்துவிட்டன. அதன் பின்னர்ப் பெரிய பெரிய ஆலயங்களிலெல்லாம் தீண்டாதார் புகுந்து தரிசனஞ் செய்தனர். இது நிற்க.

'கடன்பட்டார் நெஞ்சம்போலக் கலங்கினன் இலங்கை வேந்தன்,' என்றார் ஒரு புலவர். அங்ஙனமே நமது மாகாண உழவர், கடன் சுமை தாளாமல், சோர்ந்து கிடந்தனர். அக்கடன் தொகையின் மொத்தமோ, கோடிக் கணக்காகும். இந்தப் பிறவியில் அந்த உழவர் தமது கடனைத் தீர்த்தல் என்பது இயலாத காரியம்.

ஒருவர் நூறு ரூபாய் கடன் வாங்கியிருப்பார்; அதற்கு வட்டி, வட்டிக்கு வட்டி, ஓங்கல் வட்டி என்று நூறு ரூபாய் கட்டியிருந்தாலும், மூலக் கடன் அப்படியே இருக்கும். மேலும், நூற்றுக்கு இருபது, முப்பது என்று வட்டி குறிக்கப்பட்டிருக்கும். முதலையே கொடுக்க வகையில்லாதார், அவ்வளவு வட்டி செலுத்துதல் எங்ஙனம் இயலும்? இவ்வாறெல்லாம் கடன் பளு உழவரை ஒடுக்குவதை அறிந்தார் ராஜாஜி; **கடன் நிவாரணச் சட்டம்** என்னும் ஒரு சட்டத்தைச் செய்தார்.

அதனால், இலட்சக் கணக்கான ஏழைகள் கடனிலிருந்து விடுதலை பெற்றார்கள்; ஒரு சிலருக்கு நஷ்டம் உண்டாயிற்று. என்றாலும், எண்ணிறந்தாருக்கு நலம் ஏற்பட்டதல்லவா? அது முதல் **'அக்கிரம வட்டி'** என்பது தொலைந்தது; **'தரும வட்டி'** என்பது தலை எடுத்தது. 'காசுக்கு எட்டுச் சட்டி வாங்கி, சட்டியொன்று எட்டுக்காசுக்கு விற்றாலும், வட்டிக் காசுக்கு ஈடாகாது,' என்னும் பழமொழி ஒன்று உண்டு. அப்பழமொழியை அடித்தகற்றிய பெருமைக்கு ராஜாஜியே உரியவராவர்.

ராஜாஜி முதல் மந்திரியாராய் இருந்த காலத்திலே, அவர் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது! 'தக்கார், தகவிலர்' என்பதை அவரவர் காரியத்திலிருந்து கண்டுகொள்ளலாம் அல்லவா?

ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்திலே அரசுக்கும் அரசின் அமைச்சருக்கும் மக்களின் மனத்திலே மிக்க மதிப்பும் உதைப்பும் உண்டு. நமது ராஜாஜி முதல் மந்திரியாராக அமர்ந்து, பரிபாலனம் பண்ணியபொழுது, அந்த மதிப்பு இம்மியளவும் குன்றவில்லை; மற்று, உயர்ந்தது என்றே உரைத்தல் வேண்டும்.

அந்த உதைப்பு என்பதோ அடியோடு அகன்றது. அரசினிடமும் அமைச்சரிடமும் மக்களுக்குப் பரிவுமிகுந்தது. நமது ஆட்சி, நமது மந்திரிமார் என்று நாட்டார் அனைவரும் பிரியத்துடன் பேசத் தலைப்பட்டனர்; கலியகன்றது என்றும் களிப்புக்கொண்டனர்.

இனி, ஆங்கிலேயரின் காலத்திலே அரசின் நிர்வாகிகளான அமைச்சரைக் காண்பது என்றால், பிரமாதமான கெடுபிடி இருக்கும்; தடபுடலும் நேரும். ராஜாஜியின் காலத்திலோ, அக்கெடுபிடி மறைந்தது. அவரும் ஏனைய அமைச்சரும் காட்சிக்கு எளியராக விளங்கினர். அவர்களிடம் நகைமுகமும், இன்சொல்லும் ததும்பின. அதனால் மக்களிடம் மகிழ்ச்சி மிகுந்தது.

மேலும் அரசாங்க அலுவலகங்களின் சூழ்நிலை சுமுகமாக மாறியது. அதிகாரவர்க்கத்தினரோ மந்திரி சபையின் பான்மையினை உணர்ந்து, தமது கடமைகளை ஆர்வமுடன் நிறைவேற்றி, நாட்டு மக்களின் ஊழியராகவும் உபகாரிகளாகவும் நடக்க நாட்டம் கொண்டனர்.

சுருங்கச்சொன்னால், மக்கள் அனைவரும் வெறுத்து நின்ற அடிமைக்காற்று அகன்று, சுதந்திரத்தென்றல் எங்கும் கமழத் தலைப்பட்டது. எல்லாரும் ராஜாஜியைத் தம் மனத்தகத்தே இருத்தி மகிழலாயினர்.

# 17. சிரிய யோசனை

என்றும் இல்லாத இனிய முறையிலே தேச நிருவாகம் நடந்து வந்தது. அதனை நடத்தி வந்தவர்கள் காங்கிரஸ் மந்திரிகளே. தேசத்தின் கெட்ட காலம் போலும்! அத்தகைய நிருவாகம் திடீரென மறையலாயிற்று! அதன் காரணம் பின் வருவது :

1939-ஆம் ஆண்டிலே ஐரோப்பாவில் இரண்டாவது உலகப் பெரும்போர் மூண்டது. அதில் ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் தேசங்கள் ஒரு பக்கமும், இங்கிலாந்து, பிரான்ஸ், அமெரிக்கா முதலிய தேசங்கள் ஒரு பக்கமும் நின்று போராடின. அப்போது இந்தியாவின் உதவி இங்கிலாந்துக்கு இன்றியமையாததாயிற்று.

மாகாணங்களைக் காங்கிரஸ் மந்திரிகள் ஆண்டு வரும் போது, அதிகாரிகள் அவர்களைக் கலந்து கொள்ளவில்லை; காந்தி, பட்டேல், நேரு போன்ற தலைவர்களையும் கூட்டி யோசிக்கவில்லை; பொது மக்களின் சம்மதத்தையும் நாடவில்லை; அந்தப் போரிலே இந்தியாவையும் இழுத்துவிட்டார்கள். 'தேசத்தின் சர்வாதிகாரம் நமது கையில் இருக்கிறது!' என்பதே அதிகாரிகளின் கருத்து.

நம்மைக் கேளாமல் நம்மையும் போரில் புகுத்தியது அவமானம் என்பது ஒரு புறம் இருக்கட்டும்; போருக்கு வேண்டிய ஆள், பணம், சரக்கு எல்லாம் நாம் தேடிக் கொடுக்க வேண்டும். கொடுக்கவோ, நம்மிடம் போதுமான சத்தியில்லை. தவிர, போரினால் நமக்கு இலாபமே இல்லை; நஷ்டந்தான் மிகுதி.

இந்நிலையிலே காங்கிரஸ் மந்திரிகள் எவ்விதம் நிருவாகத்தை நடத்த முடியும்? தேசத்துக்கே அவமானம்! அதோடு தீங்கு! ஆதலின், காங்கிரஸ் மந்திரிகள் தங்கள் பதவியை வீசியெறிந்து வெளியே வரவேண்டுமென்று காங்கிரஸ் மகா சபை கட்டளை இட்டது. அதன்படி முதன்முதல் வெளியே வந்தவர் ராஜாஜியே.

"ஜனநாயகத்தையும் சுதந்தரத்தையும் நிலைநாட்டவே போரில் புகுந்ததாக ஆங்கில மந்திரிகள் கூறுகின்றார்களே! இந்தியாவின் ஜனநாயகமும் சுதந்தரமும் என்னவாது? இந்தியாவை அவர்கள் கேட்டார்களா போரில் சேர வேண்டுமென்று? கேளாமல் நம்மையும் இழுத்து விட்டதனால், இங்கே ஜனநாயகமும் இல்லை; சுதந்தரமும் இல்லை," என்று பொருள்படும் வண்ணம் ராஜாஜி பேசியதை எதிர்த்து எவரும் பேச முடியவில்லை. பின்பு, இதர மாகாணங்களிலும் காங்கிரஸ் மந்திரிகள் வெளியே வந்துவிட்டார்கள். பின்பு, காந்தி, ராஜாஜி, நேரு போன்ற தலைவர்கள் ராஜப் பிரதிநிதியைக் கண்டு பேசி, உள்ள விஷயத்தை எடுத்துரைத்தார்கள்.

'இந்தியாவின் உதவியை நன்கு அடைய வேண்டுமானால், எல்லாக் கட்சியினரும் அடங்கிய **தேசீயச் சர்க்காரை** அமைக்க ஆங்கில மந்திரிகளுக்கு இஷ்டம் உண்டா? உண்டானால், அஹிம்ஸைக் கொள்கையையும் சற்றே தளர்த்தி, யுத்தத்திற்கு எல்லா உதவிகளையும் செய்யக் காங்கிரஸ் தயார்!' என்று ராஜாஜி ஒரு யோசனை சொன்னார்.

உண்மையில் தேச நிருவாகத்தை நம்மிடம் ஒப்படைக்க ஆங்கிலேயருக்கு இஷ்டமில்லை. ஏமாற்று வித்தையே அவர்கள் செய்து வருகிறார்கள். இதனை

உலகினுக்கு அம்பலப்படுத்த வேண்டும். மேலும், மூண்டுள்ள பெரும்போரோ, மகா மோசமாய் முடியும். அச்சமயம் தேச நிருவாகம் நம்மவரின்கையில் இருக்கவேண்டும் என்று பின்னல் நேரப்போவதை முன்னறிந்து சொல்லவும் வேண்டும். ஆனது பற்றியே அவ்விதம் **சீரிய யோசனை** சொன்னார் ராஜாஜி.

அந்த யோசனையைக் காங்கிரஸ் காரியக் குழு ஒப்புக்கொண்டது. "அஹிம்ஸைக்கு மாருய் இருப்பதால், அதனை நான் ஏற்க முடியாது; ஆகவே, காங்கிரஸை விட்டு விலகிக்கொள்கிறேன்," என்று கூறி, காங்கிரஸைவிட்டு விலகிவிட்டார் மகாத்துமா காந்தி. நுண்ணிய அறிவை ஒரு சிலரே உணர முடியும். பலரும் உணர முடியாமல் மயங்கி, வாய்க்கு வந்தபடி பேசுவர்.

ஆகவே, 'காந்தியை விரட்டிவிட்டார் ராஜாஜி!' என்று சிலர் தூற்றத் தலைப்பட்டனர். அஹிம்ஸைக் கொள்கைக்காக ஆருயிரையும் வழங்குவார் காந்தி மகான். வேறு எதுவும் காந்திக்கு அவ்வளவு முக்கியமன்று. 'அஹிம்ஸைக் கொள்கைக்குப் பழுது நேராமல், தேச இலட்சியத்தை அடைந்தே தீரவேண்டும்,' என்பது ராஜாஜியின் கொள்கை.

காந்திக்கும் திலகருக்கும் ஒரு சமயம் தர்க்கம் எழுந்தது. 'சத்தியமே பெரிதெனை எண்ணி, சுய ராஜ்யத்தையும் கை விடுவேன்!' என்றார் காந்தி மகான். 'சுய ராஜ்யமே பெரிதெனை மதித்துச் சத்தியத்தையும் நழுவ விடுவேன்!' என்றார் **பால கங்காதர திலகர்.** எனவே, திலகரை 'அசத்திய புருஷர்' என்று நாம் முடிவு கட்ட முடியுமா? ராஜாஜியின் நிலையும் அப்படிப்பட்டதுதான்.

காரியக் குழுவின் தீர்மானத்தை மதித்து நடக்க ஆங்கில மந்திரிகள் ஒப்பவில்லை. அதனால், அத் தீர்மானம் பயனற்றுப் போயிற்று. காந்தியும் உடனே காங்கிரசில் வந்து சேர்ந்துவிட்டார். இதற்குள் பொது மக்களிடமிருந்து வலுக்கட்டாய மாக அதிகாரிகள் பணமும், பொருளும் பறித்து, யுத்தத்துக்கு அனுப்பி வந்தார்கள். இங்கே மக்கள் பட்டினியால் செத்தாலும், இங்குள்ள உணவுப் பொருள்களையும் போருக்கு எடுத்துக்கொண்டார் கள்.

தேச நிலைமையோ, பேரனர்த்தமாயிற்று! மக்களெல்லாரும் ஓலமிட்டனர்! ஆனாலும், ஆபத் தான வேளையில் இங்கிலாந்துடன் பெரும்போர் புரிய மகாத்துமா விரும்பவில்லை. 'போருக்கு உதவி புரிய வேண்டா' என்று ஒரு வார்த்தை மட்டும் உரைத்து, 'மந்திரிகளும் சட்டசபை உறுப்பினர் களும் சிறை புக வேண்டும்,' என்று காந்தி கட்டளை யிட்டார்.

அதற்கு இணங்கி, ராஜாஜி 1940-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மீண்டும் சிறை புகுந்தார். அதற்கு முன்னமே, நமது மாகாணத்தின் இதர மந்திரி களையும் சட்டசபை உறுப்பினர்களையும் பெரிய மனிதர்களையும் சிறை புகச் செய்தார் அவர். சென்னை நகர மாஜிஸ்திரேட்டு ராஜாஜிக்கு ஒரு வருஷக் காவல் தண்டனை விதிக்கும்போது கலங்கிப் போனார். அவர் தழுதழுத்த குரலில், "இப்போது தேசத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கடி விரைவில் நீங்க வேண்டும்! நீங்கள் சீக்கிரம் விடுதலை பெற வேண் டும்! விடுதலையானதும், மீண்டும் முதன்மந்திரியா ராக வேண்டும். அவ்விதம் ஆனால், அது கண்டு என்னைக்காட்டிலும் மகிழக் கூடியவர் வேறெவரும்

இருக்க முடியாது!" என்று மிக உருக்கமாய்க் கூறினர்.

உடனே ராஜாஜியை வேலூர்ச் சிறைக்குக் கொண்டுபோயினர்; பின்னர்த் திருச்சிச் சிறைக்கு மாற்றினர். 'கொக்கினுக்கு ஒன்றே மதி,' என்பர். அது போல ராஜாஜிக்கும், 'அரசியல் நெருக்கடி தீரும் வகை யாது?' என்பதே மதியாயிற்று. பேரறிஞர் அல்லரா? சதா சிந்தனை செய்திருந்தார் அது பற்றி. பிறகு 1942-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் அவர் விடுதலை எய்தினர்.

'காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.'

அவ்விதமே தமது சீரிய யோசனைக்கு ஏற்ற காலம் கிட்டுமென அவர் எதிர் பார்த்திருந்தார் எனல் வேண்டும்.

# 18. பேரறிவின் விளைவு

**பே**ரழகு படைத்த பெண், சில சமயம் பேரா பத்துக்கு ஆளாவாள். பேரறிவு படைத்த வரின் கதியும் அவ்வாறேயாகும். ராஜாஜி கருதிய வண்ணமே, இரண்டாவது உலகப் பெரும்போரின் போக்கு வரவர மோசமாயிற்று.

உலகின் கிழக்குப் பாகத்திலே **மலாய்த்தீவுகளில் சிங்கப்பூர்** ஒரு பெரிய துறைமுகம். அஃது ஆங்கிலே யரின் பெரிய கடற்படைத்தலமுமாகும். ஜப்பான் தேசம் அச்சிங்கப்பூர் நகரைப் பிடித்துக்கொண் டது. அஃது ஆங்கிலேயரின் மதிப்பில் பேரிடி விழுந்தது போன்றதாகும்.

சிங்கப்பூரைப் பிடித்துக்கொண்ட பின்னர், பர்மாத் தேசத்தின் மீதும் ஜப்பான் பாய்ந்து, அதனையும் சிறிது சிறிதாக வசப்படுத்தி வந்தது. பர்மாத்தேசம் ஆங்கிலேயரின் கையிலிருந்து நழுவி விட்டால், இந்தியாவுக்கும் பெரிய ஆபத்து நிகழும். இந்தியாவைக் காக்க இங்கிலாந்திலிருந்து படைகளை அனுப்ப முடியாது. அப்போது, இந்தியா தன்னைத் தானே பாதுகாத்துக்கொள்ளவேண்டும். இந்தியா வின் நலபலமனைத்தையும் முன்னதாகவே இங்கி லாந்து கொண்டுபோய்விட்டது. எனவே, திக்கற்ற நிலையில் இந்தியா இருக்க நேர்ந்தது. இந்தியா வின் மீதும் ஜப்பான் பாய்ந்தால், பிணங்கி நிற்கும் இந்தியர் என்ன செய்வர்? ஜப்பானுடன் சேர்ந்து கொள்ள ஒரு சிலர் முயலக் கூடும்.

இந்நிலையில், ஆங்கில மந்திரிகளுள் ஒருவ ரான **ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ்** என்பார், இந்தியா

வுக்கு வந்தார். அவருக்கும் பண்டித நேருவுக்கும் ஏற்கெனவே நேசம் உண்டு. ஆதலின், அவர் மகாத்துமாவையும் நேரு முதலியவர்களையும் கலந்து பேசினார்; இந்தியாவின் அரசியல் அமைப்பு விஷயமாய் ஆங்கில மந்திரி சபையின் கருத்துக்களையும் அறிவித்தார். அதன் சாரம் இது:

"இந்தியாவுக்கு நடு நாயகமாய் **இந்திய யூனியன்** என்னும் அரசியல் அமைப்பு ஒன்று ஏற்படும். பல மாகாணங்களும் சம்ஸ்தானங்களும் அந்த அமைப்பிற் சேரலாம்; விரும்பாதவை தனித்து நிற்கலாம். இராணுவ இலாக்காவைத் தவிர, ஏனைய எல்லா இலாக்காக்களையும் இந்தியரிடம் ஒப்படைத்துவிடுகிறோம். முடிவிலே இந்தியர் விரும்பினால், இங்கிலாந்துடன் தொடர்பின்றி இந்தியாவின் தனியரசும் அமைத்துக்கொள்ளலாம்."

'விரும்பாத மாகாணங்களும் சம்ஸ்தானங்களும் தனியே இருக்கலாம் என்றால், இந்தியா முழுவதும் ஒன்றாய் இருக்க இடமில்லாது போய்விடுமே! இந்தியா பற்பல துண்டுகள் ஆய்விடுமே! இதற்காகவா இத்தனை காலம் சுதந்தரப்போர் புரிந்து வந்தோம்?' என்றெண்ணி, கிரிப்ஸின் யோசனைகளை நம் தலைவர்கள் தட்டிவிட்டார்கள்.

> 'எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
> செய்தற்கு அரிய செயல்.'

என்று நமது திருக்குறள் உயர்நீதி உரைக்கும். 'கிடைத்தற்கு அரிய நல்ல சமயம் வாய்த்தால், முடித்தற்கு அரிய காரியங்களை அப்போதே செய்து முடித்துக்கொள்ள வேண்டும்.' இஃதே அக்குறளின் கருத்தாம். ராஜாஜியின் கருத்தும் இதுதான்.

"இன்றளவும் அரசியலை நம்மிடம் ஒப்படைக்க மறுத்த ஆங்கிலேயர் விதியின்றி நம்மிடம் வந்துளர்; இராணுவத்தைத் தவிர எல்லா இலாக்காக்களையும் நம்மிடம் கொடுத்துவிட இசைந்துளர். இராணுவம் அவர்கள் கையில் இருப்பதனால், இந்தியாவின் பாதுகாப்புக்கு அவர்களே பொறுப்பு ஏற்றுக் கொள்வார்கள். அன்றியும், விரும்பாத மாகாணங்களும் சம்ஸ்தானங்களும் தனியே இருக்கலாம் என்பதில் அவ்வளவு ஆபத்து ஏது? மாகாணத்தாரும் சம்ஸ்தானத்தாரும் நம்மவர்தாமே? இருவரின் நலத்தையும் மதித்து, எல்லாரும் ஒன்ருய் இருக்க வேண்டுமென்ருல், அவர்கள் காது கொடாது போவார்களா? எனவே, இந்த யோசனையை ஏற்றுக்கொள்ளலாம்," என்பது ராஜாஜியின் கருத்தாம்.

இனி, 'இந்தியாவிலே கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பங்கு மக்கள் முகம்மதியர்கள். அவர்களோ, **'முஸ்லிம் லீகு'** என்னும் சபையைத் தமது தாய்ச்சபையாகக் கொண்டுள்ளார்கள். அச்சபையோ, 'முகம்மதியரே மிகுந்துள்ள பாகத்தைப் பிரித்து, எங்களிடம் கொடுத்துவிடுங்கள்,' என்று கேட்கிறது. அவ்வாறே, 'முகம்மதியருடன் உடன்பாடு கொண்டால், ஆங்கிலேயரிடமிருந்து அதிகாரத்தைப் பறித்தல் இலகுவாம்,' என்பதும் அவர் நினைப்பாகும்.

அக்கொள்கையை ராஜாஜி வற்புறுத்தினர். மதியூகிகள் 'இதுவே சாலச் சிறந்தது!' என்ருர்கள். ஆயினும், நம் தலைவர்களோ, அதனை ஒப்பவில்லை. 'தேசத்தைத் துண்டு போடப்பார்க்கும் துரோக சிந்தையே ராஜாஜியிடம் குடிகொண்டுளது!' என ராஜ தந்திரமறியாத மக்கள் இலேசாகப் பேசத் தலைப்பட்டார்கள்; அவர்மீது பழி சுமத்தவும் முற்

பட்டார்கள்; 'காங்கிரசிலிருந்து அவரை விலக்கி விடவேண்டும்!' என்றும் பிரசாரம் செய்தார்கள்.

'பொள்ளென ஆங்கே புறம்வேரார், காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.'

அறிவு என்னும் வலியுடையார், தமது கோபத்தை உடனே வெளிக் காட்டார்; காலம் பார்த்துப் பொறுத்திருந்து, மனத்துக்குள்ளே வருந்தி நிற்பர். அவ்வாறே உள்ளத்தே வருந்தி நின்ற ராஜாஜி, தாமாகவே காங்கிரசிலிருந்து விலகிவிட்டார்.

'காங்கிரஸ் முஸ்லிம் லீகு இரண்டினுக்கும் ஓர் உடன்பாடு உண்டாக்க வேண்டும். தேசிய சர்க்காரை அமைக்கவேண்டும்; மாகாணங்களிலே கவர்னர்களின் ஆட்சியை ஒழிக்க வேண்டும்; மீண்டும் காங்கிரஸ் மந்திரி சபைகளை ஏற்படுத்த வேண்டும்; இந்தியாவைப் போர் ஆபத்தினின்று பாதுகாப்பதில் மக்களுக்கும் சர்க்காருக்கும் இடையே ஒற்றுமையை வளர்க்க வேண்டும்,' என்றே ராஜாஜி பாடுபட்டு வரலானார்.

அவரது உள்ளக்கருத்தை மக்களுள் பலரும் அறிந்துகொள்ள முடியவில்லை. மகாத்துமா மட்டும் அதனை அறிந்தார்; தேசத்தின் முன்னே சென்று பிரசாரஞ் செய்யவும் ஆசி கூறினார். ஆனாலும், தேசத்திலே அவருக்கு ஏற்பட்ட எதிர்ப்புக் கொஞ்ச நஞ்சமன்று! எல்லாவற்றையும் தமது மனத் திட்பத்தினால் சமாளித்து வந்தார், ராஜாஜி.

# 19. ஆவேசப் புயல்

தேசத்திலே மக்கள் படும் பாட்டைக் கண்டு மகாத்துமாவுக்கு மனம் தாளவில்லை. 'ஆங்கிலேயர் இத்தேசத்தின் அரசியலைத் துறந்து போனால்தான், மக்களின் பாடு தீரும்,' என்பதை அவர் உணர்ந்தார். 1942-ஆம் வருஷம் ஆகஸ்டு மாதத்திலே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பம்பாயில் கூடியது. தலைவர் அனைவரும் வந்திருந்தனர்.

'வெள்ளையர் வெளியேற வேண்டும்,' என்றார் காந்தி மகான். 'அதற்கான செயலாற்ற வேண்டும்: அன்றேல், மக்கள் மாண்டு மடிய வேண்டும்,' என்றும் அவர் உருக்கமாகப் பேசினார்; முடிவான போராட்டத்தை நடத்தித் தீரவும் யோசனை செய்தார்; அதற்கான வகை துறைகளை வகுக்கு முன்னம் ராஜப் பிரதிநிதியைக் கண்டு பேசவும் விரும்பினார்.

ஆகஸ்டு மாதம் 8-ஆந் தேதி இரவு அவரும் மற்றத் தலைவர்களும் உறங்கியிருக்கும் சமயம், அதிகாரிகள் தோன்றி, அவரையும் பிற தலைவர்களையும் சிறை செய்து கொண்டு போனார்கள். 'அவர்களை எங்கே கொண்டு போயினர்? என்ன செய்தனர்?' என்பது ஒருவருக்கும் தெரியவில்லை. அதனால் மக்களுக்குள்ளே ஆத்திரம் தலை மிஞ்சிவிட்டது!

அவ்வளவுதான்! தேசத்திலே ஆவேசப் புயல் கிளம்பிவிட, பல இடங்களிலே இரயில்கள் கவிழ்ந்தன! தந்திக் கம்பிகள் அறுந்தன! பாலங்கள் உடைந்தன! போலீஸ் சாவடிகள் சாம்பலாயின. அதிகாரிகளும் தங்கள் படைப் பலங்கொண்டு

மக்களை வதைத்தார்கள். வதைத்தும், தேசத்திலே கொந்தளிப்புத் தணியவில்லை.

தலைவர்களையெல்லாம் பிடித்துச் சிறையில் இட்ட பின்பு, மக்களைச் சாந்தஞ் செய்ய ஒருவரும் இல்லாது போயினர். பிறகு தலைவர்கள் இருக்குமிடம் மக்களுக்குத் தெரிய வந்தது. பின்பே அவர்களிடம் அமைதியும் அடக்கமும் தோன்றின. ஆனாலும், அதிகாரிகளால் மக்களை கட்டியாள முடியவில்லை. அப்போது ராஜப் பிரதிநிதியாய் இருந்தவர் **வேவல் பிரபு**.

எல்லாக் கட்சியாரும் அடங்கிய நிருவாக சபையை அமைக்கவும், நிருவாகத்தை அநேகமாக இந்தியரிடமே ஒப்படைக்கவும் அப்பிரபு கருதினர். அது பற்றி ஆலோசித்து முடிவு செய்ய, காங்கிரஸ் தலைவர்களையெல்லாம் விடுதலை செய்தார்; எல்லாத் தலைவர்களையும் வரவழைத்துப் பேசிப் பார்த்தார்.

காங்கிரசிலிருந்து விலகி நின்ற ராஜாஜிக்கும் அழைப்பு வந்தது. முஸ்லிம் லீகின் தலைவரான **ஜனப் ஜின்னுவை** ஒரு வழிக்குக் கொண்டுவர ராஜாஜி முயன்று பார்த்தார். ஜின்னுவோ, பிடிவாதமாகவே இருந்தார். அரசியற்சிக்கல் தீரவில்லை.

அப்படியிருக்கையில், இங்கிலாந்திலே தொழிற் கட்சியார் அரசாளத் தொடங்கினர். இந்தியாவிடம் அவர்களுக்கு ஆதி முதலே அன்புண்டு. ஆதலின், அக்கட்சி மந்திரிகள் காங்கிரசுடன் உடன்பாடு செய்துகொள்ள விரும்பினர்கள்; நமது காங்கிரசின் மீது முன்னம் விதிக்கப்பட்டிருந்த தடைகளை நீக்கினர்கள். உடனே ராஜாஜி வந்து காங்கிரசில் சேர்ந்துகொண்டார்.

அது சமயம் சென்னையிலே **ஹிந்தி பிரசாரசபை** யின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்க மகாத்துமா காந்தி வந்தார்; ராஜாஜியின் துணை கொண்டு, **மதுரை, பழனி** முதலிய தலங்களைத் தரிசித்தார்; ராஜாஜிக்கு விரோதமாக ஒரு கோஷ்டி இங்கிருப் பதை அறிந்தார்; பேரறிஞரும் தேசபத்தருமான ராஜாஜியின்மீது பழி சுமத்துவது தவறென்று தமது '**ஹரிஜன்**' பத்திரிகையில் எழுதினார்.

காங்கிரசுக்கும் தொழிற்கட்சி மந்திரிகளுக்கும் ஏற்பட்ட உடன்பாட்டின்படி நம் தேசமெங்கும் 1945-ஆம் வருஷம் தேர்தல்கள் நடந்தன. சென்னை யிலே தேர்தலுக்கு ராஜாஜி நிற்க வேண்டுமென்று இந்தியத் தலைவர்கள் வற்புறுத்தினார்கள். ராஜாஜி யும் இசைந்தார். ஆனால், சென்னை மாகாணத் தலைவர்கள் எதிரிகளாகவே இருந்தார்கள்.

அதனை அறிந்ததும் ராஜாஜி நமது சென்னை மாகாண அரசியலிற் கலந்துகொள்ளாமல், விலகிக் கொண்டார். அது முதல் அவரது அரிய சேவை, கூரிய மதி, தெள்ளிய யோசனை, தேர்ந்த போக்கு இவற்றை நமது மாகாணம் இழந்துவிட்டது. 'மதி யாதார் தலைவாசல் மிதிக்க வேண்டா,' என்பது ஓர் அனுபவ வசனம் அன்றோ?

காங்கிரஸ் காரியக் கமிட்டியாரோ, அவரைச் சேர்த்துக்கொண்டு, அவரது மதி நலத்தால் பயன் அடையலாயினர். பின்பு 1946-ஆம் வருஷம், செப் டெம்பர் மாதம், இடைக்காலத் தேசீய சர்க்கார் ஏற் பட்டது. பண்டித ஜவாஹர்லால் நேரு அதன் தலை வரானார். முஸ்லிம் லீகைச் சேர்ந்த ஐவர் அச் சர்க்காரிலே பின்னர்ச் சேர்ந்துகொண்டனர். ஆயினும், லீகு மந்திரிகள் ஒத்துழையாமல், முட்டுக் கட்டையே இட்டு வந்தார்கள்.

அத்துடன் தேசத்திலே வகுப்புப் பூசலுக்கும் அந்த லீகு மந்திரிகள் விதை போட்டு வந்தார்கள். அதன் விளைவாக வடவிந்தியாவிலே வகுப்புச் சண்டைகள் கிளம்பின! இரத்த ஆறு ஓடியது! 'வெள்ளையர் அடியோடு அகன்றால்தான், வகுப்புப் பூசல் நீங்கும்,' என்றார் மகாத்துமா.

அதன்படி 1947-ஆம் வருஷம், ஆகஸ்டு மாதம், 15-ஆந் தேதி முழு அதிகாரத்தையும் நம்மிடம் ஆங்கிலேயர் ஒப்படைத்தனர்; அரசியலைவிட்டும் விலகிக் கொண்டனர். ஆங்கிலேயர் அவ்வாறு செய்யவும் வகுப்புச் சண்டை நிற்கவும், நேருவும் பட்டேலும் ஓர் ஏற்பாட்டைச் செய்தனர்.

'முகம்மதியர் மிகுதியாய் வசிக்கும் பாகத்தைப் பிரித்து முஸ்லிம் லீகிடம் கொடுத்துவிட வேண்டும்; அந்தப் பாகத்தை லீகரே ஆண்டு வருவர். அது **'பாகிஸ்தான்'** எனப்படும்,' என்பதே அந்த ஏற்பாடாகும். சுமார் ஒரு கோடி ஹிந்துக்கள் பாகிஸ்தானை விட்டு, எல்லாம் துறந்து, பாரத அரசாங்கத்தில் சரண் புக நேர்ந்தது. அதனால், ஆயிரத்து நானூறு கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்தை அந்த ஹிந்துக்கள் இழந்தார்கள்; பதினாயிரக் கணக்கில் ஹிந்துக்கள் பலியானார்கள்; ஆயிரக்கணக்கான ஹிந்து மாதரை லீகர் தூக்கிக்கொண்டு போயினர். அக்கொள்ளை கொலைகளை விரித்துரைக்க இது இடமன்று. ஆனால், ஒன்று மட்டும் உரைக்க வேண்டும் :

'முஸ்லிம் லீகருடன் சமரஸமாகப் போவோம்; நாட்டிலே ஒரு பாகத்தை அவர்களுக்குக் கொடுத்து விடுவோம்,' என்று அன்றே ராஜாஜி சொன்னார்; அதன் பலனாக வீண் பழிக்கு ஆளானார். நமது

மாகாணமும் அவரது சேவையை இழந்தது. இப்போது அவர் கூறியபடிதானே பாகிஸ்தான் ஏற்பட்டிருக்கிறது! எனவே, 'தீர்க்க தரிசியார்' என்றே அவரை நாம் போற்றவேண்டும்!

இராவணன் பாட்டனை மாலியவான் என்பான் இராவணனுக்கு முன்னெச்சரிக்கை செய்து, 'சீதாதேவியை விட்டுவிடு,' என்ருன். இராவணன் கேட்கவில்லை. 'நாளைத் தெரியுமடா மாலியவான் வார்த்தை!' என்னும் ஒரு பழமொழியும் உதிக்கலாயிற்று.

'நன்ருற்ற லுள்ளும் தவறுண்டு அவரவர்
பண்பறிந்து ஆற்ருக் கடை.'

என்னும் திருக்குறள் இச்சமயத்தில் உணரத் தக்கது.

# 20. மூத்த அறிவு

'அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன் அறிந்து தேர்ந்து கொளல்.'

இது திருவள்ளுவரின் வாக்கு. ராஜாஜியின் சேவை, மதிநலம் இரண்டையும் கொண்டு பயன் பெறச் சென்னை மாகாணம் முன்வரவில்லை. அதன் மேல் அவரும் இலக்கியத் தொண்டில் ஈடுபட லானார்.

ராஜாஜியின் மூத்த அறிவையும் நேசத்தையும் பயன்படுத்திக்கொள்ளப் பண்டித நேரு விரும்பி னார். ஆதலின், மத்திய சர்க்காரிலே மந்திரியாராகும் வண்ணம் அவரை விரும்பியழைத்தார் பண்டிதர். அவரும் அதற்கு இசைந்து மந்திரியாராய் இருந்தார். பின்னர்ப் 'பிளவு பட்டுக்கிடக்கும் வங்காளத்துக்கு யாரைக் கவர்னராக நியமிப்பது ?' என்று பண்டித ருக்குக் கவலை பிறந்தது. உடனே ராஜாஜியைப் பண்டிதர் நாடினார்.

வாங்காளிகள் படபடத்த மக்கள்; மாகாணப் பற்றும் மிக்கவர்கள். அங்கே வகுப்புப்பேயின் தலைவிரி கோலமும் உண்டு. இவைகளெல்லாம் ராஜாஜிக்குத் தெரியும். ஆயினும், கடமை என்று கருதியே **கவர்னர் பதவி** ஏற்க அவர் ஒப்பினார். 'அவர் ஏன் இங்கு வருகிறார்? அவர் எங்களுக்கு வேண்டா,' என்று அங்கே சிலர் கறுப்புக் கொடி பிடித்தனர்.

ஆயினும், தம் இனிய மொழி, அரிய செயல், மலர்ந்த முகம், விரிந்த உள்ளம், பரந்த மதி, பண் புற்ற நடை இவற்றைக்கொண்டு வங்காளிகளின்

உள்ளத்தை ராஜாஜி கவர்ந்தார். அறிவுடைமை யினுல் ஆகாத கருமமும் ஒன்றுண்டோ? கவர்னர்



ராஜாஜி மேற்கு வங்காளக் கவர்னர் பதவி ஏற்கிருர்.

பதவியை விட்டு அவர் விலகிய போது, முன்னம் கறுப்புக் கொடி காட்டினவர்களும் பிரிவாற் ருமைக்கு ஆளாஞர்கள்.

வங்கக் கவர்னராய் இருந்த காலத்திலே, கவர்னர் ஜெனரலாயும் ராஜாஜி சில நாள் வேலை பார்த்தார். மௌண்ட்பாட்டன் பிரபு போன பின்பு, அவரையே காயமான கவர்னர் ஜெனரலாக நேரு கொள்ள நேர்ந்தது. 1945-ஆம் ஆண்டு கவர்னர் ஜெனரலாக அமர்ந்தார் ராஜாஜி.

'அப்பதவியிலே வேலை அதிகம் இல்லை,' என்று சிலர் நினைக்கலாம். பாரத பூமியின் நிரு வாகத் தலைவர் என்ற வகையில் பொறுப்பு அதி

கமே; ஆற்ற வேண்டிய கடமையும் அதிகமே. அவரைக் குறித்து நம் பண்டித நேரு பேசியிருப்பதைப் பார்ப்போம்:

"சென்ற இருபத்தெட்டு ஆண்டுகளாக நான் ராஜாஜியுடன் சேர்ந்து சேவை செய்துள்ளேன். பல நெருக்கடிகளை—இன்னல்களை—சிக்கலான கருமங்களை—நாங்கள் சேர்ந்து சமாளித்துள்ளோம். அவரைப்பற்றி நினைக்கையில், கவர்னர் ஜெனரல் என்று நான் நினைத்துப் பார்ப்பதில்லை; பல ஆண்டுகளாக என்னுடன் சேர்ந்து உழைத்த தோழர் என்றே நான் சிந்தித்துப் பார்ப்பேன்.

"ஒருவரிடம் நான் முக்கியமாக விரும்புவது நேர்மை—நாணயமான நடவடிக்கை. ஒருவன் உயர்ந்த இலட்சியவாதியானாலும், நாணயம் அற்றவனாயின், அவனால் நாட்டுக்கு நலமெதுவும் இராது. எனது இளமைப்பருவத்திலிருந்தே நாணயத்தை நான் முக்கியமாகக் கருதுபவன். இலட்சியவாதிகளிலே சிலரது செயல் நேர் மாறாக இருப்பதை யான் அறிவேன்; ஆதலின், நாணயத்தையே முக்கியமாக மதிப்பேன்.

"இந்தியாவிலே யாருடனாவது முக்கியமான பிரச்சினைகளைப்பற்றி நான் வாதிக்க விரும்பினால், ராஜாஜியுடனேதான் வாதிக்க விரும்புவேன். அவருடன் வாதிப்பதனால் நலமே ஏற்படும். அவரது கருத்தை நான் ஒப்புக்கொண்டாலும், ஒப்புக்கொள்ளாவிடினும் என்ன? அவரது நுண்ணறிவு, தூய நெறி,

தியாக உணர்வு இவை நாட்டின் பொக்கிஷமாகும்.

"ராஜாஜி மிகமிக எளியவாழ்க்கையை மேற்கொண்டவர்; ஆனல், அந்தஸ்து, ஆடம்பரம் இவை நிறைந்த பதவியை வகிக்கிருர். அவரைப் பார்த்த அளவில் பிறர் மதிக்கும் வண்ணம் உன்னதப் பதவியை நிர்வகிக்கிருர்."

மனிதரை மதிப்பிடுவதில் மகாத்துமாவுக்கு அடுத்தபடியாக நம் பண்டிதரையே குறிக்க வேண்டும். ராஜாஜியைக் குறித்துப் பண்டிதரின் மதிப்பைக் குறிப்பிட்டபின், நாம் சொல்லக் கிடப்பது யாது?

நமது தேசத்திற்கு உகந்த குடியரசாம் அரசியலை நம் தலைவர்கள் வகுத்துவிட்டார்கள். அதன்படி ஜனதிபதியாக ராஜன்பாபு தேர்ந்தெடுக்கப் பெற்ருர். இனிக் 'கவர்னர் ஜெனரல்' என்னும் பதவி இல்லை. ராஜன் பாபு தேர்ந்தெடுக்கப் பெற்றதும், ராஜாஜி சென்னைக்கு வந்து சிவனே என்றிருந்தார்.

அவரது மதி நலம், ஆலோசனைத் திறன் இவற்றை இழக்க நேரு ஒப்பவில்லை; ஆதலின், மத்திய சர்க்காரிலே மீண்டும் அவரை மந்திரியாராகக் கொண்டிருக்கின்ருர். 'கற்ருேர் கனம் அறிவார் கற்ருேரே' அல்லவா?

# 21. குணநலம்

> 'குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
> மிகைநாடி மிக்க கொளல்.'

என்பது தமிழ் வேதத்தில் ஒரு துணுக்காகும். மனிதரிடம் குணம் குற்றம் இரண்டும் இருக்கும். ஒருவனிடம் குணம் மிகுந்திருந்தால், அவனைக் 'குணவான்' என்போம். குணவான்களிடம் குற்றம் இருப்பினும், குற்றத்தைப் போக்கிக்கொள்ள அன்னார் முயலுவர். முயலவே, குற்றமென்பது தலை காட்டாது ஒழிந்து போம். அன்னவர் குணம் என்னும் குன்றேறி நிற்பவராவர்.

ஐம்பெரும்பாவங்களுள் ஒன்று கட்குடி. அக் கட்குடியே கொள்ளை, கொலை, சண்டை இவற்றி னுக்கு மூலகாரணம். கட்குடியினால் இலட்சக் கணக்கான குடும்பங்கள் அழிந்து போயின. ஆதலின், அக்குடியைப் போக்கவேண்டுமென ஆதி முதலே ராஜாஜி மிகவும் முயன்று வந்தார்; தாம் மாகாண மந்திரியாரானதும், சட்டம் செய்து அதனைத் தடுத்தார்.

மதுவிலக்கு முதன்முதல் சேலம் ஜில்லாவிலே தொடங்கப்பெற்றது. மதுபானக் கடைகளெல்லாம் மூடுண்டன. அப்போது சேலம் நகருக்குச் சென்றார் ராஜாஜி. மக்கள் மனமகிழ்ந்து அவரை ஊர்வலமாக அழைத்துச் சென்றார்கள். கடை வீதி வழியே ஊர் வலம் சென்றது.

சூரியனைப் பார்த்து நாய் குரைப்பதுண்டு. அவ்வாறே முஸ்லிம் லீகர் என்பார் அசூயை பொங்கி, ஊர்வலம் வரும்போது கறுப்புக் கொடி பிடித்து நின்றனர்; கோபத்தையும் துயரத்தையும் காட்டி அவமதிப்பதற்கு அடையாளமே கறுப்புக்

கொடியாம். லீகருள் ஒருவனே, கழிகொண்டு அவ் வண்டியை அடிக்கவும் செய்தான்.

அக்காலத்திலே ராஜாஜி நமது மாகாணத்தின் முதல் மந்திரியார். போலீஸ் இலாக்கா அவர் பார்வையில் இருந்தது. ஊர்வலத்துக்குக் காவலாகப் போலீஸ்காரரும் வந்தனர். ஜனக்கூட்டமோ, அவரைக் கண்கண்ட தெய்வமெனக்கருதிநிற்கிறது. இந்நிலையில் அவர் கோபக்குறி காட்டியிருந்தால், குறும்பு பண்ணியவன் கதி என்னகும்! கறுப்புக் கொடியையும் அடியையும் அவர் சட்டை செய்ய வில்லை.

1932-ஆம் வருஷத்திலே சிறைபுகும் காங்கிரஸ் காரரை ஆங்கில அரசாங்கம் மூன்று தரமாகப் பிரித்தது. முதல் தரத்தார் சிறையிலே தாம் விரும்பும் உணவும் உடையுங்கொண்டு, வீட்டிலே வாழ்வது போல வாழலாம். இரண்டாந்தரத்தாரும் ஏறக்குறைய அவ்விதமே இருக்க முடியும். மூன்ரும் தரத்தாரோ, சிறைபுணவும் சிறையுடையுமே கொண்டு சீரழிய வேண்டும்.

காங்கிரஸ்காரரின் ஒற்றுமையைக் குலைக்கவும் ஒருவர்மீது ஒருவர் பொருமை கொள்ளவுமே அவ்விதம் பிரித்தனர் ஆங்கிலேயர். அந்த 1932-ஆம் ஆண்டு சுமார் முப்பதுபேருடன் சேர்ந்து ராஜாஜி சட்டமறுப்புச் செய்தார். எல்லாருக்கும் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டது. 'ராஜாஜி முதல் தரக் கைதியாவார்; ஏனையரோ, மூன்ரும் தரத்தவர் ஆவர்,' என்று நீதிபதி தீர்ப்பு விதித்தார்.

உடனே ராஜாஜி, "எங்கள் எல்லாரையும் ஒரே தரத்தில் வைக்க வேண்டும். நானும் அவர் களுடன் மூன்ரும் தரத்தவனுகவே இருப்பேன்.

அவர்கள்; நான், நீங்கள் எல்லாரும் ஒரே மாதிரி யான வாழ்க்கை நடத்துகையில், படிப்பினாலோ, பணத்தினாலோ வேற்றுமையை உண்டாக்கக் கூடாது," என்று கூறினர். அது கேட்டதும் நீதிபதி திகைத்துப் போனார்.

1921-ஆம் ஆண்டு தேசமெங்கும் ஒத்துழை யாப்போர் நடக்கின்றது. மாணவர் அனைவரும் கலாசாலைகளை விட்டு வெளியே வர வேண்டும் என்பது அப்போரின் ஒரு கூறாகும். வெளியூர் சென்று, போரை மும்முரமாக நடத்த ராஜாஜி வகை துறை தேடி வருகிறார். வெளியூரிலிருந்து திரும்பி அவர் சென்னை சேர்ந்து, ஒரு பொதுக் கூட்டத்தில் பேசலானார்; கூட்டத்தில் ஒருவன் எழுந்து, "உங்கள் பிள்ளைகள் கலாசாலையை விட்டு வெளியே வந்துவிட்டார்களா?" என்று வினவி னான். 'கலாசாலையைக் கைகழுவிவிட்டு வா,' என்று முன்னமே தம் குமாரருக்கு அவர் கூறியிருந்தார். அவ்வாறு தம் குமாரர் செய்யவில்லை என்பது அப்போதுதான் அவருக்குத் தெரிய வந்தது. உடனே வருத்தமும் கோபமும் அவரை வாட்ட லாயின.

வீடு சேர்ந்ததும் அவர் தம் புதல்வர் இருவரை யும் அழைத்தார்; 'நீங்கள் இருவரும் கலாசாலையை இப்போதே விட்டாக வேண்டும்; அல்லாவிடில் இந்த வீட்டில் அடியெடுத்து வைக்கக் கூடாது!' என்று கண்டித்தார். இருவரும் அக்கணமே அவ் விதம் செய்தனர். அதன் பின்பே அவர்களை வீட்டில் வைத்துக்கொள்ள அவர் ஒப்பினர்.

புதுப்பாளையம் ஆசிரமத்திலே தினந்தோறும் மாலை வேளையில் கடவுள் துதி நடைபெறும். அப் போது விளக்குகள் தாழ இருக்கும்; வெளிச்சமும்

குறைவாய் இருக்கும். வழக்கம் போல உட்காரும் இடத்தில் ராஜாஜி அமரவில்லை. வேறோர் இடத்தில் உட்கார்ந்திருந்தார்.

தொண்டர்களிலே **சிவகுருநாதன்** என்பவன் ஒருவன். அவன் விளையாட்டுப்பிள்ளை. ராஜாஜியின் அருகே அவன் அமர்ந்துகொண்டான். பக்கத்தில் இருப்பவர் ராஜாஜி என்பது அவனுக்குத் தெரிய வில்லை. வெளிச்சம் மங்கலாய் இருந்ததே காரணம். அருகே இருப்பவரைத் தன் நண்பன் **இராமதுரை** என அவன் எண்ணிவிட்டான்.

கடவுள் துதி நடக்கிறது. அவன் 'அன்பன் இராமதுரைதானே!' என்று தொடையைப் பிடித்து அழுத்தினன்; கிள்ளவும் செய்தான். பிரார்த்தனை முடிந்தது. விளக்குகள் உயர்ந்தன; வெளிச்சம் அதிகரித்தது. அருகே ராஜாஜியைப் பார்த்தான்; அசைவற்றுப்போனன்! கவலை தேங்கிய முகத்தனாய்க் கையிரண்டையும் கூப்பி னன். ராஜாஜியோ, புன்னகை புரிந்தார். அவ்வளவுதான்.

சேலம் நகரில் ஒரு பாகம் **சூரமங்கலம்** எனப் படும். அங்கே பெரிய பங்களா ஒன்றுண்டு. '**பேய் வாழும் பங்களா**' என்னும் பெயர் அதற்கு ஏற்பட்டு விட்டது. அதனுல், யாரும் அதிற்சென்று வசிக்க அஞ்சினர். இன்றும் அந்தப் பங்களா இருக்கிறது. பேய்வாழும் பங்களா என்று மக்கள் மறுகிக் கிடப் பதை ஒழிக்க வேண்டுமென ராஜாஜி நினைத்தார்.

உடனே அவர் அந்தப் பங்களாவில் சென்று வசிக்கலானர். 'அசட்டுத்தனமான தைரியம் இது!' என்று பலரும் பரிகசித்தனர். நண்பர்களோ, ராஜாஜிக்குத் தீங்கு விளையும் என்று பயந்தார்கள். ஓராண்டு சென்றது. ஒரு தீங்கும் நேரவில்லை.

பின்பு அவரும் நோய் கொண்டார்; அவர் மனைவி யாருக்கும் நோய் வந்தது. 'பிசாசு சும்மா விடுமா?' என்றனர் சிலர்.



சூரமங்கலம் 'பேய்ப் பங்களா'

வியாதியோ, தற்செயலாக வந்ததாகும். அது பேயின் திருவிளையாடல் என்பது எப்படி? சிலநாள் சென்றதும், இருவரும் குணம் அடைந்தனர். பின்னர் அவர்கள் அங்கே சுகமாக வாழ்ந்து வந்தார்கள். அதன் பின்பு பேயின் பேச்சு மறைந்து போயிற்று. அவரது மனத்துணிவை எல்லாரும் போற்றினர்.

நமது தேசத்தின் கடைசிக் கவர்னர் ஜெனரலாய் இருந்தவர் ராஜாஜியே. அச்சமயம் டில்லியிலுள்ள தென்னிந்திய சங்கத்தார் அவருக்கு ஒரு

விருந்து நடத்தி; உபசாரம் செய்தனர். செய்த போது அவர் சொன்னது இது :

“இப்போது நான் வகிக்கும் கவர்னர் ஜெனரல் பதவி, பார்ப்பதற்கு மலைப்பாகத்தோன்றும். ஆனால், எனக்குள்ள வேலையோ, மிகவும் குறைவு. நான் வகிக்கும் பதவியோ, ஆலயங்களின் முன் வாயிற் கோபுரத்தைப் போன்றது. கோபுரத்துக்கு வேலை ஒன்றும் இல்லை.

“இதைவிட, நான் வீடுகளிலோ ஆலைகளிலோ உள்ள புகைக் கூண்டைப்போல இருக்கவே விரும்புகிறேன். புகைக் கூண்டானது வீட்டுக்குள்ளே அடையும் புகையை மேலே கொண்டுபோய் விடும் காரியத்தைச் செய்கிறதல்லவா ?”

சுதந்தரம் வேண்டி ஆங்கிலேயருடன் காங்கிரஸ்காரர் போரிட்டு நின்றனர். அப்போது நம்மவரிலே பலர் ஒதுங்கியிருந்தனர்; சிலரோ, காங்கிரஸ்காரரை ஏளனஞ்செய்து வந்தனர். ஆனாலும், அதிகாரம் கிட்டியவுடனே, எல்லாரும் அதில் பங்கு கேட்கத் தவறவில்லை.

இது குறித்து ராஜாஜி கூறியது : “தகப்பனரின் சொத்திலே நல்ல பிள்ளை, கஷ்டப்பட்ட பிள்ளை, சோம்பேறிப்பிள்ளை ஆகிய எல்லாருமே பங்கு கேட்பர். அது போல, காங்கிரஸ் முயன்று பெற்ற அதிகாரத்தில் எல்லாக் கட்சியாரும் பங்கு கேட்கின்றனர். இதை மறுப்பது எப்படி ?”

ராஜாஜியின் குணநலத்தைக் குறித்துப் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறுவது இது :

“ராஜாஜி மகாத்துமாஜியுடன் தர்க்கம் செய்வார்; வாதாடுவார்; இலகுவிற்பணியமாட்டார். முடிவில் மகாத்துமாவின் கருத்தை ஒப்புக்

கொண்டால், அதற்குக் காரணம், மகாத்துமாவின் முடிவு நாட்டுக்கு நலந்தரும் என்பதேயாகும்.

"ராஜாஜிக்கு மகாத்துமாவிடம் மிக்க நம்பிக்கை உண்டு. ஆனால், அவரது வாதத்திறமையும் அறிவுத் தெளிவும் அந்த நம்பிக்கையினால் சோர்ந்துவிடா. என்ன நேர்ந்தாலும், தமக்குச் சரியெனத் தோன்றும் முடிபே கொள்வார் ராஜாஜி. பிறரது முடிவை அவர் ஒப்புக்கொள்வாரானால், முற்றிலும் வாதித்துத் தெளிந்த பின்பே ஒப்புக்கொள்வார்.

"இந்தியாவிலே யாருடனாவது முக்கியமான விஷயங்களைப்பற்றி நான் வாதிக்க விரும்பினால் ராஜாஜியுடனேதான் வாதிப்பேன். அவரது கருத்தை நான் ஒப்பினும் சரி, மறுப்பினும் சரி, அவருடன் வாதிப்பதில் நன்மையே ஏற்படும். அவரது நுண்ணறிவும் உயர்ந்த நெறியும் தியாக உணர்வும் நாட்டின் பொக்கிஷமாகும்."



ராஜாஜிக்குக் கவர்னர் ஜெனரல் பதவிக்கு விசுவாசப்பிரமாணம் செய்விக்கிறார் பிரதம நீதிபதி கனியா.

# 22. சொற்செல்வம்

'பேசத் துணிந்தாயோ, சாகத் துணிந்தாயோ?' என்பார்கள். 'மனிதருள் நூற்றுவருள் ஒருவரே சபைக்கு உரியவர்; ஆயிரவருள் ஒருவரே புலவர்; பதினுயிரவருள் ஒருவரே பேச வல்லவர்,' என்பர் பெரியோர். பலரும் விரும்பிக் கேட்கும் வண்ணம்—பகைவரும் பரிந்தேற்கும் வண்ணம்—பேசுதல் பெரும்பேறாகும்.

> 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
> வேட்ப மொழிவதாஞ் சொல்.'

என்கிருர் திருவள்ளுவர். அத்தகைய சொற்செல்வம் படைத்தவர் ராஜாஜி. சேலம் ஜில்லாவைச் சேர்ந்த புதுப்பாளையத்திலே அவர் நடத்தி வந்த ஆசிரமத்தில் கைராட்டையில் நூற்றல், கதர் நெசவு, மது விலக்கு, தீண்டாமை போக்கு முதலிய தொண்டுகள் நடந்து வந்தன.

அதிற்பல தொண்டர்கள் சேர்ந்து சேவை செய்து வந்தார்கள். அவர்களுள் ஒருவர், 'என் தமக்கையார் மகளுக்கு மணம் நடக்கிறது; ஊருக்குப் போய் வர வேண்டும்,' என்று ராஜாஜியின் உத்தரவை நாடி நின்ருர்.

**ராஜாஜி:** நல்லது. கட்டாயம் போகவேண்டுமா? இரயில்வே கட்டணம், இதர செலவு எல்லாம் சேர்ந்து எவ்வளவு ஆகும்?

**தொண்டர்:** சுமார் ரூபாய் முப்பது ஆகும்.

**ராஜாஜி:** சரி, ரூபாய் இருபது மணியார்டர் செய்து, மருமகளுக்கு ஆசி கூறி, ஒரு கடிதம் எழுதி

விடுங்கள். உங்கள் தம்பியார் அங்கே இருக்கிறார் அல்லவா? அவர் பார்த்துக்கொள்வார் மேலே ஆகவேண்டுவதை. உங்களுக்கு அலைச்சல் மிச்சம்; பணமும் இலாபம்; சரீர சிரமமும் இல்லை. தெரிந்ததா?

'சரி,' என்று சொல்லி அவ்வாறே செய்தார் அத்தொண்டர். அந்த அறிவுரையை மீறி நடத்தல் எங்ஙனம்? இது நிற்க.

சுதந்தரம் அடையுமுன்னம், இங்கே அவர் முதல் மந்திரியாராய் இருந்தார்; பின்னர் அதனை வீசியெறிந்து வெளியே வந்தார்; பின்பு தேசத்தினிடையே சென்று கிளர்ச்சி செய்தார். அப்போது பத்திரிகையொன்று, அவரைப் பதவிப் பித்தரென்று பேசி, **நையாண்டிச் சித்திரம்** ஒன்று வெளியிட்டது. அதில் 'ராஜாஜியே சீதை; மகாத்துமாவே இராமன்; பதவியே மாயமான்; இலக்குவனே பொது ஜனம்' என்று குறித்திருந்தது.

'மாயமானை விரும்பி, இராமனை விடுத்தாள் சீதை; இலக்குவனையும் போக்கினாள்; தானும் இராவணனிடம் சிறையானாள்,' என்பது கதை. அச் சித்திரங்கண்டதும் சிரித்தார் அவர். பொதுக் கூட்டமொன்றில் பேசும் போது, பின் வருமாறு பதில் அளித்தார் அச்சித்திரத்தைக் குறித்து:

"பதவிக்கு நான் ஆசைப்படுதல் மெய்யானால், அதுபற்றி நாட்டுக்கு நலமே உண்டு. சீதை மாயமானை விரும்பியதனாலேதான், இராவணன் அழிந்தான். அது போலவே, பதவி என்னும் மாயமானுக்கு நான் ஆசை கொண்டாற்றான், பிரிட்டிஷ் இராவணனும் சீக்கிரமே அழிய முடியும்!"

முன்னம் திருப்பதிக் கோயிலில் ஹரிஜன் ஒருவன் புகுந்தான், பெருமாளைத் தரிசனஞ் செய்ய. ஆலயத்துக்குள் அவன் நுழைந்ததால் கோயில் அசுத்தமாகி விட்டது என்று போலீஸார் வழக்குத் தொடுத்தனர். சித்தூர்க் கோர்ட்டிலே வழக்கு நடந்துகொண்டிருந்தது.

வழக்கின் முடிவையறிய ராஜாஜி அங்கே போயிருந்தார். எதிரியின் வழக்கறிஞரோ, ராஜாஜியே வழக்கை நடத்தவேண்டும் என்று வேண்டிக் கொண்டார். அதற்கு ராஜாஜியும் இசைந்து, போலீஸின் சாட்சிகளைக் குறுக்கு விசாரணை செய்தார்.

அப்போது, 'அந்த ஹரிஜன் தூய்மையாகவே ஆலயத்துக்கு வந்தான்; துவாதச நாமங்கள் தரித்திருந்தான்; 'கோவிந்தா, கோவிந்தா' என்று பத்தியுடன் பஜனை செய்தான்,' என்று சாட்சிகளெல்லாரும் ஒப்புக்கொண்டார்கள். பின்பு அவர் வாதிக்கப் புகுந்தார்:

"தூய்மையாய் வந்து, துவாதச நாமம் தரித்து, 'கோவிந்தா, கோவிந்தா' என்று துதிப்பதா ஆலயத்தை அசுத்தம் செய்வதாகும்?" என்று ராஜாஜி கேட்டார். நீதிபதி உடனே வழக்கைத் தள்ளி விட்டார்.

> **'ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது**
> **சீரியது என்று ஒன்றைச் செப்பரிதால்;—ஆரியம்**
> **வேதம் உடைத்து, தமிழ்திரு வள்ளுவனர்**
> **ஓது குறட்பா உடைத்து.'**

என்று **வண்ணக்கஞ்சாத்தனர்** என்பார் விளம்பியிருக்கிறார். வடமொழியிலே **வேதம்** இருக்கிறது;

தமிழிலோ, திருக்குறள் துலங்குகிறது. இப்படியிருக்க, வடமொழி, தென்மொழி இரண்டில், 'இதுதான் இனியது; சிறந்தது' என்று ஒன்றை உரைத்தல் அரிதாம் என்பதே இப்பாடலின் கருத்தாகும்.

வடமொழி, தென்மொழி என்று பேசிப் பிணக்கு ஊட்டுவதைக் கண்டால் ராஜாஜிக்குப் பிடிக்காது. வடமொழியினிடம் சிலர் வெறுப்புக் காட்டுவதையும் அவர் சகியார். இரண்டு மொழிகளையும் ஆண்டவனும் அவன் அடியார்களுமே வளர்த்து வந்தார்கள். இதைக் குறித்து அவர் ஒரு சமயம் உரைத்தது இது:

" வடமொழியை நாம் எப்படி விலக்க முடியும்? வடமொழிச் சொற்கள் கலவாத பழந்தமிழ் நூல் ஒன்றுகூட இல்லை. எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் குறிப்பிடுங்கள். அதிற்சில ஸம்ஸ்கிருத வார்த்தைகளையாவது எடுத்துக் காட்டுகின்றேன். அப்படி எடுத்துக் காட்டும் வார்த்தைகளெல்லாம் சுத்தத் தமிழ்ப் பதங்களே என்றும், அவை தமிழிலிருந்தே வடமொழிக்குச் சென்றவை என்றும் கூறுவார்கள். ஸம்ஸ்கிருதமே தமிழிலிருந்து வந்தது என்றுகூடச் சிலர் துணிந்து கூறுவார்கள். போளியைப் பிசைந்து உருட்டித்தான் வெல்லம் செய்திருக்கிறார்கள் என்று சொல்வது போல இருக்கும் அந்த வாதம்."

இனி ஹிந்துஸ்தானி என்பது தேசிய பாஷையாகப் போகிறது. பாரத மக்களிலே முக்காற்பகுதியினர் ஹிந்தி பேசுகின்றனர். தமிழரும் அதனைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்றார் மகாத்துமா காந்தி. ஆங்கில மொழியையும் நாம் கைவிட்டுவிடுவதற்கில்லை. அவ்விரு மொழிகள் பற்றி ராஜாஜி கருத்து இது:

"ஒரு தேசத்துக்கு இரயில் வண்டி மட்டும் இருந்தால் போதாது; ஆகாய விமானமும் வேண்டும். தேசம் முழுவதும் சுற்றிப் பார்ப்பதற்கு இரயில் வண்டி போல உதவும் ஹிந்தி பாஷை. ஆங்கில மொழியோ, வெளித் தேசங்களுடன் உறவு வைத்துக்கொள்ள ஆகாய விமானம்போலப் பயன்படும்."

ராஜாஜியின் சொற்செல்வத்துக்கு மற்றோர் உதாரணம் தருவோம்:

'ஹோம்ரூல்' எனப்படும் சுயராஜ்யக் கிளர்ச்சி ஓங்கி நின்ற காலம்—அன்னி பெஸண்டம்மையார், வாடியா, அருண்டேல் ஆகிய மூவரையும் சென்னை யரசாங்கம் கைது செய்து காவலில் வைத்தது. மூவரையும் நீலகிரியிலுள்ள கூனூருக்கு இரயிலிற் கொண்டு போகின்றனர்.

இரயிலடிகளிலே ஜனக்கூட்டம் சேராதபடி பலத்த போலீஸ் பாதுகாப்பு இருந்தது. ஆனாலும், சேலத்தையடுத்த சூரமங்கலத்தில், சேலம் நகரே திரண்டுவந்து கூடிவிட்டது. இரயிலடிக்குப் போகும் வழியின் இரும்புக்கதவுகள் பூட்டியிருந்தன. இரும்புக் கிராதி வேலிகளோ, ஐந்தாறடி உயரமிருந்தன.

பொங்கி வரும் ஜனக்கூட்டமோ, ஆவேசம் கொண்டுவிட்டது. உடனே பூட்டுகள் உடைந்தன; இரும்பு வேலிகள் ஆகாயத்தில் பறந்தன. இரயிலடியிலே இரயில் பாதையிலே எள் போட்டால் எள் விழாது! அவ்வளவு கூட்டம்! நூற்றுக்கணக்கான மக்கள் இரயில் பாதையிலே உட்கார்ந்து விட்டார்கள்.

இதற்குள் ஜில்லாக்கலெக்டர் போலீஸ் படையுடன் அங்கே வந்தார்; ஜனத்திரளைக் கண்டு

வெருண்டார்; போலீஸாரோ, துப்பாக்கிகளிலே தோட்டாக்களை நிரப்பிச் சுடுவதற்குத் தயாராய் இருந்தனர். ஜனங்களின் 'ஜே!' கோஷம் வானை முட்டுகிறது! கலெக்டரும் படபடப்புடன் இருக்கிறார்.

'சரி: இனிப்படுகொலைதான் நிகழப் போகிறது!' என்று சிலர் பயந்து நிற்கின்றனர். அரைநாழிகைக்குள் அம்மூவரையுந்தாங்கிய இரயில் வண்டி வந்துவிடும். நகரத்தின் ஜனத்தலைவர்கள் திகைப்புக்கொண்டு நிற்கின்றார்கள். அங்கே ராஜாஜி தோன்றினர்; ஜில்லாக்கலெக்டரிடம் சென்றார்.

சொல்லிலே ஒரு சுவை—குரலிலே ஓர் இனிமை—நெஞ்சிலே ஒரு நம்பிக்கை! அவர் சாந்த நோக்குடன் கலெக்டரை நோக்கி, "கலெக்டருக்கு ஒரு விண்ணப்பம்: உங்கள் அதிகாரத்தைப் புறக் கணிப்பதற்கில்லை. நீங்கள் சாந்தமாக எண்ணிப் பார்க்க வேண்டும். மக்களின் ஆவேசத்துக்கு என்ன தண்டனை என்பது இருக்கட்டும். உங்களுக்கும் அரசாங்கத்துக்கும் எது கீர்த்தி, எது கௌரவம் என்பதே முக்கியம். அடுத்த நிமிஷம் அமர்க்களமாய் ஒரே படுகொலை நேரக்கூடிய சந்தர்ப்பத்தைச் சமாளிப்பதே மேன்மையாகும். மக்கள் சுடப்பட்டுப் பிணமாய்க் கிடப்பதில் யாருக்கு என்ன பலன்? இதில் மேன்மையோ, கீர்த்தியோ ஏது? நீங்கள் உற்றுநோக்கி உணரவேண்டும். விளையாட்டில் ஈடுபட்ட குழந்தைகளைப் போன்றது ஜனக்கூட்டம். பெற்றோர் நிலையிலுள்ள அரசாங்கம் சற்றே விட்டுக்கொடுத்தால், தீங்கு விளையாது; சிறப்பே உண்டாகும்; உங்களது பெருந்தன்மையும் பிரகாசிக்கும்," என்று இயம்பினர்.

அவ்விதம் ராஜாஜி பேசியதுகண்டு கலெக்டர் கரைந்துபோனார். இதற்குள் இரயில் வந்துவிட்டது. பாதையில் மக்கள் இருத்தல் கண்டு அது எட்ட நின்றுவிட்டது. பெஸண்டம்மையார் வெளியே தலையை நீட்டினார். பூமாலைகள் மலைபோலக் குவிந்தன. மக்களின் புரட்சி மனப்பான்மையும், உற்சாகமும் கண்டு அந்த அம்மையாரின் கண்களிலிருந்து ஆனந்த நீர்த்துளிகள் சொட்டின.

உன்னதக்காட்சி-உள்ளத்தையள்ளும் காட்சி-இரண்டு மூன்று நிமிஷம்! பிற்பாடு இரயில் வண்டி புறப்பட்டுவிட்டது. ஜனக்கூட்டமும் சிறிது சிறிதாகக் கரைந்துவிட்டது. ராஜாஜி புன்னகை பூத்தார். கலெக்டரும் நிம்மதியுடன் வீடு சேர்ந்தார். போலீஸாரும் 'ஜே!' கோஷத்திற்கலந்துகொண்டு, வந்த வழியே போயினர்.

'விரைந்து தொழில்கேட்கும் ஞாலம், நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.'

"முறை பிறழாமல் இனிதாகச் சொல்ல வல்லாரைக் கண்டால், அவர் சொல்லும் தொழிலை உலகத்தார் உடனே கேட்டு அவ்விதமே நடப்பர்," என்பதில் தடை ஏது?

# 23. முடிவுரை

ராஜாஜியின் சிறப்பியல்களை ஒருவாறு எழுதி வந்தோம். ஒரு தேசத்துக்குப் பெயரோ, புகழோ ஏற்படுதல், பேரறிஞராலேதான். ராஜாஜி பல துறையிலும் பேரறிவு வாய்ந்தவர். இலக்கியத் துறையிலே அவருக்குள்ள பேரறிவை நம் தமிழகம் நன்கறியும்.

சிறையில் வசிக்க நேர்ந்த போதெல்லாம், இலக்கியப்பயிற்சியிலும் தேர்ச்சியிலும் அவர் மிக்க கவனம் செலுத்தினர். பற்பல நூல்களைப் படித்துத் தாம் மட்டும் இன்புற்றதோடு அவர் நிற்கவில்லை; சிறைக்குள்ளேயே அந்த இன்பத்தைப் பலரும் நுகருமாறு செய்து வந்தார். நாள் தவறினலும், சிறைக்குள்ளே அவரது இலக்கியப் பள்ளிக்கூட நடைமுறை தவறியதில்லை.

அரசியலில் பங்கு கொள்ளுமுன், அவருக்கு வடமொழிப்பயிற்சி இல்லை; பின்னரே அம் மொழியில் பயிற்சி பெற்ருர்; நூல்களும் எழுதலானர். வடமொழியிலே பகவத்கீதையும், உபநிஷதங்களுமே அரிய தத்துவ நூல்கள். அவற்றை அறிந்து இன்புறுதல் எளிதன்று. ஆயினும், ராஜாஜி அவற்றைக் கற்றதுடன் பிறரும் கற்று இன்புறும் வண்ணம், **கண்ணன் காட்டிய வழி, உபநிஷதப் பலகணி** என்னும் சிறு நூல்களை இயற்றியிருக்கிருர்.

தமிழ்மொழியில் அவருக்குள்ள ஆர்வம், அளவிடற்கரியது. தமிழிலே அவர் எழுதியுள்ள—எழுதி வரும் கட்டுரைகளே இதற்குச்சாட்சி பகரும்.

குட்டிக் கதைகள், குடி கெடுக்கும் கள், சிசுபாலனம், தாவரங்களின் இல்லறம், அபேதவாதம், தமிழில் வருமா முதலிய நூல்களை அனைவரும் ஆசையுடன் படித்து வருகின்றனர்.

இத்தாலி தேசத்துப் பண்டைய வேந்தர் மார்க்க அரேலியன் என்பார் தமது ஆன்ம சிந்தனைகளைப் பற்றி எழுதி வைத்துப்போனர். அவற்றை எளிய இனிய தமிழில் ராஜாஜி வெளியிட்டிருக்கிறார். மேனாட்டு மகானின் தத்துவ உணர்வை நம்மவர் உணர வேண்டும் என்பதே அவரது கொள்கை.

தமிழிலே தலை சிறந்த தத்துவ நூல் திருக்குறள் இதனை அயல்நாட்டினர் உணரவேண்டி, ஆங்கிலத்தில் ஒரு விளக்கம் எழுதியுள்ளார் ராஜாஜி. 'வியாசர் விருந்து' என அவர் வரைந்துள்ள நூல் தமிழருக்கு ஒரு விருந்தேயாகும்; திண்ணை ரசாயனம், உலகநிலை முதலியன சிந்தைக்கு விருந்தளிக்கும்.

ராஜாஜியின் சொல் வன்மை தனிப் பெருமை வாய்ந்தது. அதிற்காணும் நகைச்சுவை அனைவரையும் கவரும்; உவமைகளும் உள்ளத்தே உணர்ச்சி ஊட்டும். கொச்சைத் தமிழிலும் கிராமபாஷையிலும் பேசினல் என்ன? அதன் சுவையும் வேகமுமே முக்கியம் அல்லவா? அவரது பேச்சுக்கு எதிர்ப் பேச்சு இருக்க இயலாது.

வேறு வழியில்லை என்றால்தான் ராஜாஜி ஆங்கிலத்திற் பேசுவார். எப்போதும் தமிழிற்பேசுவதிலேயே அவருக்கு ஆர்வம் அதிகம். மிகநுணுக்கமான அரசியல் என்ன, மிக நுட்பமான பொருளாதாரம் என்ன, மிகக்கடினமான விஞ்ஞானம் என்ன, இவற்றை நாட்டுப்புற வாசிகளும் நன்கறிந்து கொள்ளும்படி பேசக்கூடியவர் அவர் ஒருவரே.

பேரறிஞரின் நடுவிலே அவர் பேசுவது அனைவருக்கும் அறிவின் புதுமையாகவும் அற்புதமாகவும் துலங்கும். பட்டு நூலின் சிக்கைப்போன்ற செய்திகளையும் தெள்ளென எடுத்துரைப்பதில் அவருக்கு அவரே நிகராவர்.

இங்ஙனம் பற்பல துறைகளிலும் புலமையும் பெருமையும் வாய்ந்த ராஜாஜி, ஒரு தமிழர் என்பதில் நமக்கெல்லாம் பெருமை உண்டு. அவர் தமிழகத்தினுக்குத் தனியாச்சிறப்புத் தேடி வைப்பவர். அவர் நீடுழி வாழ்க!